KALKI 21.11.93

# கல்கி

பரபரப்பான
பேட்டி
+
ஆய்வுக்
கட்டுரை

# தாக்குப் பிடிப்பாரா வாழப்பாடி?



இன்றைய
ஸ்பெஷல்:
அருகம்புல்
ஜூஸ்!

# மந்திரிகள் வாடகை பாக்கி ரூ 30 லட்சம்!

●● 'தில்லி மாநகர் டெலிபோன் நிகம்' என்னும் மாபெரும் தில்லித் தொலைபேசி அமைப்பின் அதிகாரிகள் வேலை நிறுத்தம் செய்வது, போனஸ் அல்லது அதிகப்படி ஊதியம் கேட்டு அல்ல. அவர்கள் விரும்புவது தங்கள் இலாகாவில் ஒழுக்கத்தையும், கட்டுப்பாட்டையும்தான்! பழுதான தொலைபேசிகள் 24 மணி நேரத்தில் சீர்செய்யப்படும் என்று பார்லிமெண்டில் மந்திரி உறுதிமொழி கொடுத்தாலும் நடப்பது வேறு. ''கீழ்நிலை ஊழியர்கள் எங்கெங்கு பணம் பெயர்கிறதோ, அங்கங்குதான் வேலை செய்கிறார்கள்; ஊழலும் லஞ்சமும் தலைவிரித்தாடுகின்றன. மேலதிகாரிகளை அவர்கள் சற்றும் பொருட் படுத்துவதில்லை. ஒழுங்கை நிலைநாட்ட ஏதாவது நடவடிக்கை எடுத்தாலும் மேலிடத்தின் குறுக்கீட்டால் மாற்று உத்தரவு கொடுக்கப்படுகிறது. தெற்கு தில்லி, பீதம்புரா, ஜனக்புரி போன்ற இடங்களில் டெலிபோன்கள் ஒரு மாதமாக வேலை செய்யவில்லை. அலுவலகங்களில் சட்டம், ஒழுங்கு அடியோடு குலைந்து போனதால், இனி நாங்கள் 'வொர்க் ஆர்டர்' கொடுக்கப் போவதேயில்லை'' என்கின்றனர் இடைநிலை அதிகாரிகள்!

●● நான்கு ஆண்டுகளுக்கு முன் மத்திய மந்திரியாகப் பதவி வகித்த போது, அரசாங்கத்தின் மொத்த சக்தியையும் தன் கைக்குள் அடக்கி வைத்திருந்த தேவிலால், இன்று அதே ஜனதா தளக் கட்சியில் தனது பேரன் (ஓம் பிரகாஷ் சௌதாலாவின் மகன்) ஒரு வேட்பாளராகப் போட்டியிட அனுமதி வேண்டி, பீகார் முதல்வர் லல்லு பிரசாத் யாதவிடம் கெஞ்ச வேண்டியிருந்தது! காலச் சக்கரம்தான் எப்படியெல்லாம் சுழல்கிறது பாருங்கள்!

●● மத்திய அரசாங்க இந்நாள், முன்னாள் அமைச்சர்கள் முப்பது பேர் அரசுக்கு வாடகைப் பணமாக பாக்கி வைத்துள்ள மொத்தத் தொகை 30 லட்சம் ரூபாய்! இந்த வரிசையில் தினேஷ் சிங், அர்ஜுன் சிங், எஸ்.பி. சவாண், பி. சங்கரானந்த், ஜாபர் ஷெரீப், குலாம்நபி ஆஸாத், ஜகதீஷ் டைட்லர், கல்பனாத் ராய், ராஜேஷ் பைலட், கிருஷ்ணகுமார், எட்வார்டோ ஃபலெரோ, வி.சி. சுக்லா அனைவரும் உண்டு! இந்த பாக்கியை வசூல் செய்யப் பலவித முயற்சிகள் எடுத்துத் தோல்வியுற்ற அர்பன் டெவலப்மெண்ட் துறை, காபினெட் செக்ரடரியிடம் முறையிட, அவர் அமைச்சர்களுக்குத் தனிப்பட்ட முறையில் கடிதம் எழுதியுள்ளார்! பலன் கிடைக்குமா என்பதுதான் தெரியவில்லை!

●● ஒன்பதாவது உலக சமஸ்கிருத மகாநாடு, ஆஸ்திரேலியாவில் உள்ள மெல்பர்னில் நடக்கவிருக்கிறது. அதன் இந்தியக் குழுவின் தலைவராகத் தம் பெயரையே பரிந்துரைத்திருக்கிறார் சுற்றுச் சூழல் துறை மந்திரி கமல்நாத். அங்கு, ''சமஸ்கிருத இலக்கியத்தில் சுற்றுச் சூழலுக்கு அளிக்கப்படும் முக்கியத்துவம்'' என்பதைப் பற்றிப் பேசப் போகிறேன் என்கிறார் மந்திரி! நாட்டில் ஆயிரக்கணக்கான சமஸ்கிருத மொழி வல்லுநர்கள் இருக்க, ஓர் அமைச்சர் இதற்குப் போவதைப் பற்றி முணுமுணுப்பு ஒரு புறம். மறுபுறம் சமஸ்கிருதப் பண்டிதர்கள் பழைய இலக்கியங்களைத் துழாவி, மந்திரிக்கு விஷய தானமும் செய்ய வேண்டிய நிலை!



* சவான்



* ராஜேஷ் பைலட்

● விஞ்ஞானிகளிடம் ஆலோசனை கேட்ட போது, பான் மசாலாவில் சாக்கரின் (செயற்கைச் சர்க்கரை) சேர்த்தால், புற்று நோய் வரக் கூடிய சாத்தியங்கள் உண்டு என்று கூறியிருக்கிறார்கள். இந்தியாவில் உள்ள பல உணவாராய்ச்சி நிலையங்களும் புற்றுநோய் ஆய்வு நிறுவனங்களும் இதே கருத்துத் தெரிவித்துள்ளன. இருப்பினும், மத்திய சுகாதாரத் துறை பான் மசாலாவில் சாக்கரின் சேர்க்க கம்பெனிக்கு அனுமதி வழங்கியிருப்பதாகக் கூறப்படுகிறது! எந்த விதத்தில் நியாயமோ தெரியவில்லை.

புதுதில்லியிலிருந்து :

ராஜீவி நரசிம்மன்




'இன்றைய ஸ்பெஷல் : அருகம்புல் ஜூஸ்' என்று சென்னை மேற்கு மாம்பலத்திலுள்ள ஒரு கறிகாய்க் கடை வாசலில் போர்டு எழுதி வைத்திருந்ததைப் பார்த்ததும் நமக்கு ஆச்சரியம்! அருகம்புல் ஜூஸில் அப்படியென்ன ஸ்பெஷல்?

''என்ன அப்படிக் கேட்டு விட்டீர்கள்? சர்க்கரை வியாதி, இரத்த அழுத்தம், ஆஸ்துமா போன்ற பல வியாதிகளுக்கு அருகம்புல் ஜூஸை விடச் சிறந்த மருந்து வேறு எதுவுமே கிடையாது. அதோடு, நோய் இருப்பவர்கள்தான் இதைச் சாப்பிட வேண்டும் என்பதில்லை. நோயே இல்லாதவர்களும் இதைத் தினந்தோறும் குடிக்கலாம்; உடல் மேலும் ஆரோக்கியத்துடன் இருக்கும்!'' என்கிறார் கடைக்காரர் சுவாமிநாதன்.

''அது சரி... நிஜமாகவே உங்கள் கடைக்கு வந்து அருகம்புல் ஜூஸ் வாங்கிக் குடிப்பவர்கள் இருக்கிறார்களா, என்ன?'' நாம் சந்தேகத்துடன் அவரைக் கேட்டோம்.

''அதிகாலை ஐந்து மணிக்கு வந்து பாருங்கள். நிறைய பேர் வருவார்கள். ஏழு மணிக்குள் ஜூஸ் தீர்ந்து விடும். காலை வெறும் வயிற்றில் இதைக் குடித்தால்தான் பலன் என்பதால் ஏழு மணிக்குப் பிறகு நாங்கள் விற்பதில்லை. இதற்கு மேலும் விளக்கம் தேவையானால் சென்னை இயற்கை மருத்துவ ஆராய்ச்சி மற்றும் சேவை மையத்தின் செயலாளர் டாக்டர் எஸ். இருபளானியிடம் கேளுங்கள்!'' என்றார் சுவாமிநாதன்.




● சுவாமிநாதன்




● கிருபளானி

''இயற்கை மருத்துவம் என்றால் என்ன?'' - இயற்கை மருத்துவர் கிருபளானியிடம் கேட்டோம்.

''இயற்கை மருத்துவம் என்பது புதிய விஷயமே அல்ல. நமது உணவு நெறியே மருத்துவ குணம் வாய்ந்ததுதான். மாறி வரும் உணவுப் பழக்கங்கள்தாம் பல நோய்களுக்குக் காரணமாகி விட்டன!''

''சரி. நமது உணவு நெறி என்றீர்களே, அது என்ன?''

''நமது உணவு நெறி என்பது முழுக்க முழுக்க சைவம். சைவம்தான் மனிதனுடைய இயற்கையான உணவு முறை. அப்புறம் கீரை வகைகள், காய்கறிகள், பழங்கள் போன்றவை. வெள்ளைச் சர்க்கரை மிக மிக ஆபத்தானது. ஆனால், அதை உபயோகிக்காதவர்களே இடையாது. நமது உடலுக்கு இனிப்பு அவசியமானதுதான். அதற்காகச் சர்க்கரையைத்தான் உபயோகிக்க வேண்டுமா என்ன? பனை வெல்லம் உபயோகிக்கலாம். அல்லது சாதாரண வெல்லம் கூட உபயோகிக்கலாம். அப்புறம் முளைகட்டிய பயறு வகைகள் உடலுக்குத் தெம்பும் வலுவும் தரக்கூடியவை. ஆனால், நமது நாகரிகம் என்கிற துரதிருஷ்டம், இவையெல்லாம் நோயாளிகள் அல்லது ஏழைகள் உபயோகிக்கும் பொருள்களாகத்தான் கருதப்படுகின்றன.

''இம்மாதிரியான பொய்யான தோற்றங்களைப் போக்கி, மக்கள் இயற்கையான உணவுகளை உட்கொண்டு பூரண நலத்துடன் வாழ வேண்டும் என்பதற்காகத்தான் நாங்கள் அவ்வப்போது முகாம்கள் நடத்தி, 'நமது உணவே மருந்துதான்; எனவே, நமது உடலுக்குத் தனியாக மருந்து எதுவும் தேவையில்லை!' என்று எடுத்துச் சொல்லி வருகிறோம்! எந்த சீசனில் என்னென்ன கிடைக்கிறதோ, உங்களுக்கு என்னென்ன பிடிக்கிறதோ அவற்றைச் சாப்பிட்டால் போதும். அதுவே உங்கள் உடல்நலத்தைப் பேணிக் கொள்ளும்!'' என்கிறார் கிருபாளானி.




* கமாலுதீன்




* டாக்டர் நம்பி

''இன்னும் கூட எளிமையாகச் சொல்ல வேண்டுமானால், ஒவ்வொருவரும் தினசரி, அரை கேரட், அரை தக்காளி, வெள்ளரிக்காய்த் துண்டு ஒன்று, இரண்டு மூன்று துண்டு வெங்காயம், தேங்காய்ப் பத்தை ஒன்று... இவற்றை நன்றாக மென்று தின்றாலே போதும்; பல நோய்கள் உங்கள் பக்கமே நெருங்காது!'' என்கிறார் அவர்.

''சரி, இன்னும் நீங்கள் அருகம்புல் ஜூஸ் பற்றிய விளக்கமெதையும் கூறவில்லையே?'' என்று நாம் கேட்ட போது, கிருபளானியைப் பார்ப்பதற்காக பி. கமாலுதீன் என்பவர் வந்தார்.

அப்போது கிருபளானி ''அருகம் புல் ஜூஸ் பற்றி நீங்கள் இவரிடமே கேட்கலாமே!'' என்றார்.

''எனக்கு ஹார்ட் பிராப்ளம். இங்கிலீஷ் மருந்துகள் சாப்பிட்டுப் பயனில்லை. கடைசியில்தான் இயற்கை மருத்துவத்திற்கு வந்தேன். இப்போது நிறைய முன்னேற்றம். தினசரி காலையில் அருகம்புல் ஜூஸ் குடிப்பதுதான் முக்கிய காரணம். இந்த முன்னேற்றத்தை நான்



* 'வொண்டர் ரோப்': தொந்தி காணாமல் போயிடும்!

அனுபவரீதியாக உணர்ந்ததால், நான் கடந்த ஐம்பது ஆண்டுகளாகத் தினசரி சாப்பிட்டுக் கொண்டு வந்த அசைவ உணவு வகைகளை - அவை இயற்கை உணவுக்கு விரோத மானவை என்பதால் - முழுமையாக விட்டு விட்டேன். அதுவும் எனது உடல்நல முன் னேற்றத்துக்கு இன்னொரு காரணம்!'' என்று ரொம்பவும் உற்சாகமாகக் கூறினார் கமாலுதீன்.

அருகம்புல் ஜூஸை எப்படித் தயாரிப்பது? ஐந்து கைப்பிடி அளவு அருகம் புல்லை எடுத்துச் சிறு சிறு துண்டுகளாக நறுக்கிக் கொள்ளுங்கள். பிறகு அதை நீர் விட்டு அம்மியில் வைத்து அரைத்து (மிக்ஸி கூடவே கூடாது) எடுத்துப் பிழிந்தால் அருகம்புல் ஜூஸ் ரெடி. அதோடு சிறிது தேனும் கலந்து கொண்டால் சுவையும் பிரமாதமாக இருக்கும்.

''அருகம்புல் ஜூஸை தண்ணீர் குடிக்கிற மாதிரி மடக்மடக்கென்று குடித்தால் அதனால் எந்தப் பயனும் இல்லை. ஒரு தம்ளர் ஜூஸைச் சுமார் பத்து நிமிடங்களுக்காவது சிறிது சிறிதாகச் சுவைத்துக் குடிக்க வேண்டும். அப்போதுதான் முழு பலனும் கிட்டும். அருகம்புல் கிடைக்காதவர்கள் இயற்கை மருத்துவ மையங்களில் கிடைக்கும் அருகம்புல் பொடியை வாங்கியும் ஜூஸ் தயாரித்துக் கொள்ளலாம்!'' என்கிறார் கிருபளானி.

எளிமையான உணவு வகைகள் போலவே, எளிமையான உடற்பயிற்சியும் நமது உடல்நலத்திற்குப் போதுமானது என்பது இயற்கை மருத்துவ சேவை மையத்தினருடைய கருத்து.

''உதாரணத்திற்கு என்னையே எடுத்துக் கொள்ளுங்கள். 32 வயதிலேயே எனக்குப் பருத்த தொந்தி. 'வொண்டர் ரோப்' என்று சொல்லப்படும் இந்தக் கயிற்றின் மூலம் தினசரி பத்து நிமிடம் உடற்பயிற்சி செய்தேன். கைமேல் பலன். சில நாட்களிலேயே என் தொந்தி இருந்த இடம் தெரியவில்லை!'' என்கிறார் கிருபளானி.

'வொண்டர் ரோப்' என்பது ஒன்றும் பெரிய விஷயமில்லை. இரண்டு சம நீளமுள்ள நைலான் கயிறுகள். (படத்தில் உள்ளது போல்) ஏதாவதொரு ஜன்னல் கம்பியில் கூட இரண்டு கயிறுகளையும் மாட்டி விட்டு, ஒரு நுனியில் காலை நுழைத்துக் கொண்டு, மறு நுனியைக் கையால் பிடித்த படி மேலும் கீழும் கையையும் காலையும் மாறி மாறி இழுத்தாலே போதுமானது. ஒருமுறை இதைத் தெரிந்தவரிடம் கற்றுக் கொண்டாலே போதும். யார் வேண்டுமானாலும் இதைச் செய்து விட முடியும்!

இன்றைய நிலையில் கொஞ்சம் கொஞ்சமாக நகர மக்களும் இயற்கை மருத்துவத்தின் பக்கம் தங்கள் கவனத்தைத் திருப்பினாலும் ஆங்கில மருத்துவர்கள் இது பற்றி என்ன நினைக்கிறார்கள்?

''இயற்கை மருத்துவத்தில் பக்க விளைவுகளோ, தீய விளைவுகளோ கிடையாது. செலவும் மிகக் குறைவுதான். ஆயினும் நவீன - விஞ்ஞானபூர்வமான அடிப்படை எதுவும் இயற்கை வைத்தியத்தில் கிடையாது.

''இருப்பினும் என் தந்தை டாக்டர் மு.வ. இயற்கை மருத்துவத்தைத்தான் ஆதரித்தார். காப்பியோ, கடுநீரோ கூட அருந்த மாட்டார். ரஷ்யாவுக்குப் போயிருந்த போது, 'வோட்கா'வை நீட்டி, 'இது மதுபானம் என்று நினைக்காதீர்கள். இந்தக் கடுங்குளிரில் உடம்புக்குச் சூட்டை உண்டாக்கத்தான் இதைத் தருகிறோம்!' என்றார்கள். மறுத்து விட்டார். காப்பியாவது சாப்பிடச் சொன்னார்கள். 'பழக்கமில்லை!' என்றார் மு.வ. 'சரி, கடுநீராவது குடியுங்கள்!' என்ற போது, 'அதையும் நான் பருகிப் பழக்கமில்லை!' என்று மறுத்து விட்டார். 'பிறகு எப்படி இந்தக் கடுமையான குளிரைச் சமாளிப்பீர்கள்?' என்ற போது, 'இன்னொரு கம்பளி கொடுங்கள் போதும்!' என்று சொல்லி விட்டார்.

''மு.வ. வுக்கு இருதயம் பாதிக்கப் பட்ட போது, அவருடைய மிக நெருங்கிய நண்பரொருவர், 'மாத்திரை சாப்பிடுகிறீர்களா?' என்று கேட்ட போது மட்டுமே அதை வாங்கிச் சாப்பிட்டு விட்டு, ''மருந்து என்று இதை நான் சாப்பிடவில்லை. உங்கள் அன்பு காரணமாகத்தான் இந்த மாத்திரைகளைச் சாப்பிட்டேன்!' என்றார் என் தந்தை...'' என்கிறார் டாக்டர் வ. தம்பி.

– நமது நிருபர்கள்
படங்கள் : கோபிநாத்

---



*ஆசிரியர் : உங்க பையன் ரஜினி ரசிகனா?*

*அவர் : எப்படிக் கண்டுபிடிச்சீங்க?*

*ஆசிரியர் : இமய மலையின் * சிறப்பைக் கேட்டா 'அது ரஜினிக்கு அமைதியளிக்கிறது'ன்னு சொல்றான்!*

*- அம்பை தேவா*

# காலை நேரக் கவலைகள்...

பாப்பையா பக்கம்



"என்னங்க; எந்திரிங்க; பால்காரன் பழி போட்டிருவான்."

- என் தர்மபத்தினியின் பள்ளி எழுச்சி தொடங்கி விட்டது.

மங்கல் இருட்டிலும் அவள் மங்கள முகம் மனத்திற்கு மகிழ்ச்சியாக இருந்தது.

பையை எடுத்துக் கொண்டு படியில் இறங்குகிறேன்.

"பார்த்துப் போங்க" - அவள்தான் எச்சரிக்கை குண்டை எடுத்து வீசுகிறாள்.

நான் என்ன கழுத்தில் சங்கிலியா போட்டிருக்கேன், எவனும் என் கழுத்தில் கை வைக்க? அதெல்லாம் இல்லை. குண்டும் குழியுமாகக் கிடக்கும் வீதி சிலர் காலைத் தட்டி விளையாடும் நேரம் அது. 'என்ன அவசரம்; இருய்யா, சித்த உன் கதையைப் பேசுவோம்' என்று எவரையும் இடறிவிழச் செய்து விடும். ஆமாம்; திறப்பு விழாக்களுக்குச் செல்லும் அமைச்சர்கள் தெருக் குழிகளை மூடும் விழாக்களும் நடத்தக் கூடாதோ...?

ஊர்வலக் கல்லெறியில் தப்பிய ஒருசில தெரு விளக்குகள் 'எங்க கதையும் எத்தனை நாளைக்கோ' என்று பயந்து பயந்து எரிந்து கொண்டிருந்தன.

பால் டெப்போ முன் வந்து விட்டேன். எனக்கும் முன்பே அங்கே ஏழெட்டுப் பேர். டெப்போ பையனிடம் ஒரு சிரிப்பும் இல்லை; சிநேக பாவமும் இல்லை. நம்மை எட்டவே நில் என்று சொல்லும் எரிச்சல் பார்வை! இது ஏன்? பக்கத்து ஹோட்டல்காரர்கள் வந்தால் மட்டும் பல்லை இளிக்கிறானே! அதுதான் மக்கள் ஏதேதோ பேசுகிறார்கள்! நமக்கு உழைக்க நம்மால் நியமிக்கப்பட்டவன் என்ற உணர்வு அவனுக்குள் வரவில்லையே; இதை யார் அவனுக்குச் சொல்லித் தருவது?

டெப்போவிற்கு அருகே ஒரு பெட்டிக் கடை; மற்றொரு டீக்கடை. டீக் கடையின் கழிவுநீர் டெப்போவிற்குக் குறுக்கே தான் போகும். அந்த டீக்கடைக்காரர் ஓர் அரசியல் பிரமுகர். அவரை யார் தட்டிக் கேட்க முடியும்? நகராட்சி ஊழியர் சிலரை அவர் காலத்தில் அவர்தான் பணிக்கமர்த்தினாராம்; பின் என்ன? உண்ட வீட்டிற்கு ரெண்டகம் செய்ய முடியுமா? கழிவுநீர் நாற்றத்தைப் போக்க இரண்டு கடைக்காரர்களும் மலிவான ஊதுவர்த்தியைக் கொளுத்தியிருந்தனர்; இதற்குக் கழிவுநீர் நாற்றமே தேவலை!

பேப்பர்காரப் பையன் பெட்டிக் கடையை நோக்கிச் சைக்கிள் பெல்லிலேயே ஒரு சங்கீதம் வாசித்தபடி இறங்குகிறான்.

"இன்னைக்கு பஸ் ஸ்டிரைக்; எந்த வண்டியும் ஓடாது."

பேப்பரை எண்ணிக் கொடுத்து விட்டு ஏதோ ஒரு வேகத்தில் எகிறிப் பறக்கிறான்.

"பஸ் ஓடாதுன்னா பால் வண்டியும் வராதா?" - ஒரு பாட்டியின் பதைபதைப்பு!

"அதுக்கும் இதுக்கும் என்ன பாட்டி; வண்டி இப்ப வந்துரும்" - இதை நான் பாட்டிக்காகச் சொல்வேனா, எனக்கு நானே சொல்லிக் கொண்டேனா? பின்னதுதான் உண்மை.

"இவ்வங் காலமேயா; எந்த நேரம் எது நடக்குமுன்னு இந்த நாட்டில தெரியலையே; ஸ்டிரைக் செய்யறவங்க நேத்தே சொல்லியிருக்கக் கூடாதா?" - பாட்டிதான்.

"ஆமா; எல்லாம் சொல்லிட்டுச் செஞ்சாத்தான் இங்க என்ன நடந்துறப் போகுது? மகாராஷ்டிரத்துல பூகம்பம் வந்துச்சி; சொல்லிக்கிட்டா வந்துச்சி? தொழிலாளியும் ஒரு பூகம்பம் மாதிரின்னு தெரியணும்; அப்பத்தான் பயம் வரும்." - டீக்கடை அருகே டீ குடித்துக் கொண்டிருந்த ஒருவர் குறுக்கே புகுந்து கொக்கரித்தார். நிச்சயமாக இது ஒரு எதிர்க்கட்சிக்காரரின் ஆனந்த ஆவேசக் குரல்தான்!



''செய்யுங்க; பதினாலு நாள் நோட்டீசு கொடுத்துட்டுத்தான் செய்யணுங்கிற விவரங்கூடத் தெரியாம செஞ்சா எப்படி?'' - இவர் ஆளுங்கட்சியா, பொதுஜனமா கண்டு பிடிக்க முடியவில்லை.

பாலுக்காக நின்று கொண்டிருந்த ஒருவர், ''என்னத்துக்காக இப்ப ஸ்டிரைக்காம்?'' என்றார்.

அவ்வளவுதான். ''என்னத்துக்காகவா; ஏதோ பெரிசா போனசு கொடுக்கிற மாதிரி பத்திரிகையில போடுறது. அப்புறம் இவ்வளவு சம்பளம் வாங்குறயா நீ, உனக்கு போனசு இல்ல; உனக்கு இல்லன்றது; இது என்னையா மானங்கெட்ட பொழப்பு! இந்தத் தடவை உண்டு இல்லைன்னு பாத்துற வேண்டியதுதான்'' என்றார்.

''ஆமப்பா; உங்க கட்சி ஆட்சியில இருந்தப்பவே இதுக்கெல்லாம் ஒரு முடிவு பண்ணியிருக்கக் கூடாதா'' - இவருக்கு அவரைத் தெரியும் போலிருக்கிறது.

''செய்யலாமுன்னுதான் இருந்தோம்; எங்க எங்களை ஒழுங்கா இருக்க விடுறீங்க; எங்களுக்கு எத்தனை சோதனைய்யா?''

''இதத்தானே இவுகளும் சொல்லுவாங்க...''

''சொல்லுவாகளா; சொல்ல முடியுமா?''

''போகட்டும்; பேசி முடிவு செய்யலாமில்ல?''

''பேச்சி என்ன பேச்சி? செத்த பேச்சி! இவுககிட்ட பேசி என்ன ஆகப் போகுது?''

''அப்பப் பேசிப் பாத்திட்டீகளா?''

''பேசியிருப்பாக; அத அந்தத் தொழிலாளிகிட்டயில்ல கேக்கணும்!''

- இவர் அந்தத் தொழிலாளி இல்லையா? இவருக்குத் தொழிலாளிகள் மீது இருக்கும் அக்கறை - பொய்! ஆளும் கட்சி மேல் இருக்கும் கோபம் - நிஜம்!

அதுவரை இங்கே நின்று பீடி குடித்துக் கொண்டிருந்த ரிக்‌ஷாக்காரர் ஒருவர் ''அண்ணே! நானும் பதினைஞ்சு வருஷமா இந்த வண்டியோட மல்லுக்கட்டிக்கிட்டு இருக்கேன். எனக்கொரு போனசு எப்பண்ணே கிடைக்கும்'' என்று அவரது ஆதங்கத்தை மிகக் குத்தலாகவே கேட்டார்.

''இந்தா! உனக்கு இல்லேன்றதுக்காக ஊருக்கே இருக்கப்படாதுன்றயா? போப்பா வேலையைப் பாத்துக்கிட்டு'' - சொன்னவர் நகர்ந்து விட்டார்.

ஆமாம்! இந்த வேலை நிறுத்த ஆயுதத்தை எது எதற்குத்தான், எவர் எவர்தான் பயன்படுத்த வேண்டும் என்ற விவரமே இல்லாமல் போனால் இந்த நாடு எதிர்காலத்தில் என்ன ஆகும்? இப்போதைக்கு இந்த நாட்டில் ஸ்டிரைக் செய்யாதவர்கள் இரண்டே இரண்டு பேர்தான். ஒருவர் விவசாயி; மற்றொருவர் பிச்சைக்காரர்!

அதோ, பால் வண்டி வந்து விட்டது! - ஒரு கவலை ஒழிந்தது.

வேலைக்கு எப்படிப் போவது? - இது புதிய கவலை.

**– சாலமன் பாப்பையா**



# காத்திருக்க நேரமில்லை

கஞ்சா, அபின் உற்பத்தி, கடத்தல். அதைத் தடுக்கும் ஒரு கார்த்திக். பின் வழக்கம் போல அவர் மனைவி கொலை, பெண் கடத்தல் இத்யாதி, இத்யாதி.

மற்றொரு கார்த்திக் மற்றுமொரு ராபின் ஹூட். ஜோடி சிவரஞ்சனி. மழையில் நனைய விட்டு, உருட்டுகிற உருட்டலோடு, கொசுறு பின்பாதி குஷ்பு உருட்டல்.

கதை சூடுபிடிக்குமா? காத்திருக்கும் நிலை. இடைவேளையில் கொஞ்சம் நிமிர்ந்தால், உடனே 'டமால்'. எல்லோரும் ஊட்டிக்கு ஓடுகிறார்கள். வட்டக் கண்ணாடி, பிரெஞ்ச் தாடியோடு கார்த்திக் கொஞ்சம் குஷ்பு பின்னால் அலைய, அவ்வப்போது பொன் மொழிகளை உதிர்க்கிறார்.

என்னதான் சொல்ல வருகிறார்கள்? திடீரென்று ரெட்டைக் குழல் துப்பாக்கி, முனைக்கு முனை ஓடும் குதிரைகள். கை, மேலே படுவதற்குள்ளேயே பின்னால் தாவும் உதை வாங்கிகள். எல்லாம் முடியும்



போது படமும் முடிந்து விட்டது.

நினைவில் நிற்பவர் நாசர். தியாகுவும், சின்னி ஜெயந்தும் பெரிய சறுக்கல். வடிவேலு? சரியான கடிவேலு. எத்தனை படங்களில் அப்பா குரலில் பேசுவார் ஜூனியர் பாலையா?

படத்தின் ரட்சகர்கள் ஒளிப்பதிவாளர் மற்றும் எடிட்டர். 'துளியோ... துளி', 'வா... காத்திருக்க நேரமில்லை' பாடல்களின் ஒளிப்பதிவு சொட்டு நீலப் பளிச்.

இளையராஜா மட்டுமே மிஸ்ஸிங்! அடி விழுவதற்கு முன்னரே 'டிஷ்ம்' 'டிஷ்ம்' கேட்கிறது! சீட் நுனியில் உட்கார வைப்பதற்குப் பதில், பாப்கார்ன் வாங்கி வரவே வெளியே அனுப்புகிற ஒலிப்பதிவு.

டைரக்டர் நிறைய பூச்சுற்றுகிறார். எந்த ஊரில் சார் தம்மாத்தூண்டு பொண்ணு பப்ளிக் பிராசிக்யூட்டர் ஆகியிருக்கிறது? 'சதக், சதக்'கெனக் குத்தினால் உடனே குஷ்பு மண்டையைப் போடலாம். இரண்டு குண்டு பட்டும் கார்த்திக் சாக மாட்டாரா? என்ன லாஜிக்கோ?

- துளசி






**வி**ல்லியம்ஸ் தம்பதிக்குப் பதினாறு குழந்தைகள்! அவர்களுள் பதினோரு வயதினர் மட்டுமே ஐவர்! ஸாரா, ஆன்ட்ரியா, ஸ்டீபன், தாமஸ், பிரையன். மூச்சைப் பிடித்துக் கொள்ளுங்கள்... இந்த ஐந்து வாண்டுகளும் வில்லியம்ஸ் தம்பதி தத்து எடுத்துக் கொண்ட குழந்தைகள்! சாராவும் ஆன்ட்ரியாவும் தென் கொரியாவைச் சேர்ந்தவர்கள்; பிரையன் பிலிப்பைன்ஸ் நாட்டுச் சிறுவன்; ஸ்டீபன் - தாமஸ் கொரிய நாட்டு இரட்டைச் சகோதரர்கள். இந்தப் 'பஞ்ச பாண்டவர்கள்' தவிர இன்னும் ஏழு தத்துப் பிள்ளைகளும் நான்கு பெற்றெடுத்த பிள்ளைகளும் இந்த நெஞ்சுரம் மிக்க தம்பதிக்கு உண்டு!

அதிகாலை ஆறரை மணிக்குக் காலை உணவு நேரம் - வில்லியம்ஸ் தம்பதி வீட்டு டைனிங் ரூம் குழப்பக் களஞ்சியமாகக் காட்சியளிக்கும். பத்து மகன்களும் ஆறு மகள்களும் தவிர, விருந்தாளியாக வந்த ஒரு ஃபிரெஞ்சு மாணவன் மற்றும் இரண்டு கால்ஃப் ஆட்டச் செப்பந்திகள் ஆகியோருக்கு வயிறு நிரம்பியாக வேண்டும். சமைத்துப் போட்டு சாத்தியமில்லை என்பதால் 'ஜில்' பாலும், பழங்களும், கார்ன் ஃப்லேக்ஸும் பதினாறடி டைனிங் டேபிளில் குவிக்கப்படும். எல்லோருக்கும் ஒரே வகையான உணவுதான். பிடிக்காதவர்களுக்கு ஸ்பெஷல் தயாரிப்பெல்லாம் இடையாது!

சாப்பிட்டு முடித்ததும் அவரவர் செய்ய வேண்டிய வேலைகளைப் பட்டியலாக எழுதிப் போட்டிருக்கிறார்கள். காலைப் பணிகள் போல் மாலைப் பணிகளுக்கும் பட்டியல் உண்டு. கடைக் குட்டிகளான ஐந்து வயது காபிக்கும் கேடிக்கும் 'டியூடி' இடையாது. ஆனால் அதற்குப் பதிலாக, அவர்கள் பெயருக்கு நேராக, 'ஸ்கூல் பஸ்ஸில் சண்டை போடாமல் சமர்த்தாக இருக்கவும்', 'மதியத்துக்கான உணவை உணவு இடைவேளை நேரம் வரை வைத்திருந்து சாப்பிடவும்' போன்ற நினைவூட்டல் குறிப்புகள்!

# அமெரிக்காவில் ஓர் ஆச்சரியக் குடும்பம்!



வில்லியம்ஸ் குடும்பத்தின் ஒரு வார மளிகை செலவு 1500 டாலர் ஆகிறது! சென்ற வருடம் தனியார் பள்ளிகளுக்கு அறுபதாயிரம் டாலர் ஃபீஸ் கட்டி சளைத்துப் போய், இவ்வாண்டு எல்லா குழந்தைகளையும் பொதுப் பள்ளிகளுக்கு மாற்றி விட்டார்கள்.

குழந்தைகளின் துணிமணிகள், ஷூஸ் ஆகியன மாறிப் போகாமலிருக்க எல்லோருக்கும் வயதுக்கிரமமாக 1 முதல் 16 வரை நம்பர்கள் கொடுக்கப்பட்டுள்ளன. அதே நம்பர்கள் அவர்களது ஆடைகளிலும் குறிக்கப்பட்டிருக்கும்!

ஒன்றிரண்டு பெற்றுக் கொள்ளவே ஓராயிரம் முறை யோசிக்கும் இந்தக் காலத்தில், சராசரி வருமானத்துடன் நேஷனல் பாஸ்கட்பால் அசோசியேஷனில் பணியாற்றி வரும் வில்லியம்ஸ் தம்பதிக்கு இப்படி ஒரு டஜன் குழந்தைகளை தத்தெடுத்துக் கொள்ள ஏன் தோன்றியது?

''எங்கள் திருமணம் முறிந்து போகிற நிலையில் இருந்தது. என் மனைவிக்கு நிறைய குழந்தைகள் வேண்டுமென்ற ஆசை இருந்தது. அதை நிறைவேற்றினால் திருமணத்தைக் காப்பாற்றலாம் என்று முடிவு செய்தேன். இருவரும் கலந்து பேசி, தத்து எடுத்துக் கொள்ள முடிவு செய்தோம். தென்கொரியாவைச் சேர்ந்த இரண்டு சிறுமிகள் எங்கள் முதல் தத்துக் குழந்தைகள் ஆனார்கள்...'' என்கிறார் பாட் வில்லியம்ஸ்.

இந்தக் குடும்பத்தில் தத்துப் பிள்ளைகளுக்கும் பெற்றெடுத்த பிள்ளைகளுக்கும் இடையே மன வேறுபாடுகள் எதுவும் இல்லை. எல்லாக் குழந்தைகளும் ஒருத்தரோடு ஒருத்தர் காலப் போக்கில் ஒத்துப் போகக் கற்றுக் கொண்டு விட்டார்கள்.

கடைசியாக இக் குடும்பத்தில் வந்து சேர்ந்தவள் டானியலா. சில மாதங்கள் முன்பு வரை தாய் தந்தையற்ற ஏழை சேரிப் பெண்ணாக இருந்தாள். இன்று தன் சகோதரர்களைக் கவனித்துக் கொள்வதையும் சகோதரிகளுக்குத் தலை சீவி விடுவதையும் மிக இயல்பாகச் செய்து வருகிறாள் டானியலா... எந்தவிதமான வித்தியாசமோ ஏற்றத் தாழ்வோ அவள் உணரவில்லை. பெற்றோர் மனத்தில் அது இல்லாத போது பிள்ளைகளிடமும் அது காணப்படாததில் ஆச்சரியம் என்ன...!

நன்றி : ஸ்டான்

இதைப் போன்ற வித்தியாசமான ஆச்சரியக் குடும்பங்கள் கல்கி வாசகர்களுக்குத் தெரிந்திருந்தால் எழுதி அனுப்பலாம்... 1994 "குடும்ப உறவுகள் ஆண்டு" என்பதை நினைவூட்டுகிறோம்!


இந்தாப்பா, உனக்காக பந்த் நடத்தி அறிக்கை விட்டுட்டோம்... நீ மகாராசனா எப்பவும் இப்படியே வாழ்ந்து வெங்கனா கவனிச்சுக்க!
தி.மு.க ஆதரவு!
அரசு ஆதரவுடன் கடை அடைப்பு!
பஸ் ரயில் ஓடாது!


தொகுதி பக்கம் தலை காட்டாமலேயே இருந்து ரொம்பக் களைச்சுப் போயிருப்பீங்க... ஒரு வாரமிட, வோர்ல்ட் டூர் அடிச்சுட்டு வாங்க, ஜம்முனு...
புரட்சித் தலைவி புகழ் பாரெல்லாம் பரவி இருக்கறதைப் பார்த்துட்டு வர்றோம்!
அயல் நாடு செல்லும் 74 எம்.எல்.ஏக்கள்.


பூகம்பத்தை மறக்காதீங்க! தீபாவளியை அடக்கமா கொண்டாடுங்க... காசைக் கரியாக்காதீங்க...
அரசின் டாம்பீகச் செலவுகள்
பிரதமர்
இடைத் தேர்தலையொட்டி காங். கட்சி வாரி வழங்கும் பணம்




# கல்கி





1993
நவம்பர் 21
மலர் : 52
இதழ் : 17
ஸ்ரீமுக
கார்த்திகை 6


தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.

## பிற்படுத்தப்பட்டோருக்கு முதலைக் கண்ணீர்!

செவ்வாய்க் கிழமையன்று கவி பார்த்தபடி ஹாய்யாகப் பொழுதைக் கழித்த எல்லோரும் ஜோராய் ஒரு தடவை கை தட்டுங்கள்! ஜெ.க்கு ஜே! வாழப்பாடிக்கு ஜே! கருணாநிதிக்கு ஜே! ராமதாசுக்கு ஜே! வீரமணிக்கும் ஜே!

எலியும் பூனையுமாக, பாம்பும் கீரியுமாகச் சண்டை போட்டுக் கொள்ளும் நமது வீரத் தலைவர்கள் எல்லாரும், "இட ஒதுக்கீடு" என்று சொன்னால் போதும் பெட்டிப் பாம்பாய் அடங்கி விடுவார்கள்! "சதவீதம்" என்று பேச்செடுத்தால் போதும் "ஆமாம், ஆமாம்" என்று தலையாட்டி, போட்டி போட்டுக் கொண்டு ஒத்துழைப்பு நல்க ஓடோடி வருவார்கள்! எல்லோருக்கும் பிற்படுத்தப்பட்ட சமுதாயத்தினரிடம் அவ்வளவு அக்கறை! அதைவிட அவர்கள் பாக்கெட்டில் உள்ள வோட்டின் மீது அதிக அக்கறை!

சுதந்திரம் பெற்று 46 ஆண்டுகள் ஆகி விட்டன. இதோ பொன் விழா ஆண்டு வந்து கொண்டே இருக்கிறது. இன்னமும் இந்த நாட்டில் பிற்படுத்தப்பட்டோருக்கு ஒதுக்கீடு எத்தனை சதம் என்பதில் போட்டி! பிற்படுத்தப்பட்டவராகக் கருதப்பட வேண்டும் என்பதிலும் போட்டி! இதனை மானக்கேடு என்று யாரும் கருதுவதாகத் தெரியவில்லை. இதைவிடக் கேடு கெட்ட விஷயம் என்னவென்றால், 46 ஆண்டுகளில் படிப்படியாகக் குறைந்து வந்திருக்க வேண்டிய பிற்படுத்தப்பட்டோர் எண்ணிக்கையும் ஒதுக்கீடு சதவீதமும் அதிகரித்துக் கொண்டே போவதுதான்! அப்படி அதிகரித்துக் கொண்டே போவதில்தான் நமது அதிமேதாவிகளான அரசியல் தலைவர்கள் ஆர்வம் காட்டுகிறார்களேயன்றி, பிற்படுத்தப்பட்டவர்களை முற்படுத்துவதில் அல்ல.

எப்படி முற்படுத்துவது? 46 ஆண்டுகளில் பிற்படுத்தப்பட்ட சமுதாயத்தினருக்குச் சிறப்புச் சலுகை தந்ததுடன் அவர்களுக்குச் சிறப்புக் கல்வியும் அளித்திருந்தால், அந்தக் கல்வி தன்மானத்தையும் சொந்தக் காலில் நிற்கும் தகுதியையும் வளர்த்திருந்தால் சலுகை பெறுவதையே அவமானமாக நினைப்பார்கள். 'ஒதுக்கீடு வேண்டாம்' என்றோ 'குறையுங்கள்' என்றோ அவர்களே முன்வந்து கூறுவார்கள். ஆனால் நமது அரசியல் தலைவர்கள் இதற்கு இடம் தரவில்லை. மாறாக, 'கி.பி. 2000 ஆண்டில் உலகின் படிப்பறிவற்ற மக்கள் தொகையில் சரிபாதி இந்தியாவில்தான் இருக்கும்' என்ற ஐ.நா. சபையின் கணிப்பையும் சான்றிதழையும்தான் பெருமிதத்துடன் பெற்று மகிழ்ந்திருக்கிறார்கள்.

ஏன் இப்படி? மக்களைக் கல்வி அறிவு அற்றவர்களாக வைத்திருப்பதிலே தான் அரசியல்வாதிக்கு ஆதாயம் இருப்பதைக் கண்டுகொண்டார்கள். அப்போதுதானே இலவச வேட்டி என்றோ, குடம் என்றோ தந்து அவர்களை ஏமாற்றி வோட்டுக்களை அறுவடை செய்ய முடியும்! மக்களைத் தன்மானமற்றவர்களாக, நிரந்தரமாகக் கையேந்தி நிற்பவர்களாகச் செய்து விட இயலும்! படிப்பறிவு - நல்ல கல்வி - பெற்று விட்டால் இந்த ஏமாற்று வேலையெல்லாம் செல்லுபடியாகாது. வாரி இறைக்கப்படுவது கட்சிப் பணமோ அரசாங்கப் பணமோ எல்லாமே தங்களைக் கசக்கிப் பிழிந்து பெறப்படுவதுதான் என்பதைக் காரண காரியத்துடன் மக்கள் புரிந்து கொண்டு விடுவார்கள்! "உன் கொள்கைகள் என்ன? விளக்கு!" என்று கேட்கத் தொடங்கி விடுவார்கள்! எனவேதான் நிரட்சரகுட்சிகளை அதிகமாக்கியும் பிற்படுத்தப்பட்டோர் முத்திரை குத்தியும் சலுகை என்னும் 'ஷோ' காட்டியும் வோட்டு அறுவடை செய்கிறார்கள் அரசியல்வாதிகள்.

இந்த நாடகத்தின் ஓர் அங்கம்தான் ஜெ. 'கதவடைப்பு' என்று அறிவிக்க, மற்ற கட்சிகளும் ஜே போட, மக்கள் வீட்டிலேயே ஒருநாள் முடங்கியது. இதனால் நாட்டுக்கு எவ்வளவு நஷ்டம் என்று கணக்கிடத் தெரிந்தால், அந்த நஷ்டத்தையும் நாம்தான் கடைசியில் சுமக்க நேரும் என்பதைப் புரிந்து கொள்ளும் சக்தி அப்பாவி மக்களுக்கு இருந்தால், பல்வேறு கட்சித் தலைவர்களும் இப்படி ஆட்டம் போட்டு, பிற்படுத்தப்பட்ட மக்களுக்காக முதலைக் கண்ணீர் வடிக்க முடியாது.

பொருளாதார அடிப்படை, ஜாதி அடிப்படை என்று பலராக பிற்படுத்தப்பட்டோர் உண்டு. ஆனால் நேர்மையில் பிற்பட்டு நிற்பதில் நமது அரசியல்வாதிகளுக்கு நிகர் யாரும் இல்லை.

# தாக்குப் பிடிப்பாரா

நான்கு வருடங்களுக்கு மேல் தமிழக காங்கிரஸின் தலைவராக இருந்து வரும் வாழப்பாடி, எந்த அ.தி.மு.க.வுடன் உறவு கொள்ள வேண்டுமென்பதற்காக தலைவராக்கப்பட்டாரோ, அதே கட்சியினால் தலைமைப் பதவியை இழக்கும் நிலையில் இருக்கிறார்! ஆம், மறுபடி அ.தி.மு.க. - காங்கிரஸ் உறவு ஏற்பட வேண்டுமென்றால் வாழப்பாடி பதவி இழக்க வேண்டும் என்பது ஜெயின் முக்கிய நிபந்தனைகளில் ஒன்று.

இத்தனைக்கும் அ.தி.மு.கவுடன் வாழப்பாடி முன்னர் கொண்டிருந்த நல்லுறவு, அவர்கள் செய்யும் பல தவறுகளையும் பொருட்படுத்தாமல் பொறுத்துப் போவதாய் இருந்தது. காவிரி விவகாரத்தில், அமைச்சராக இருந்த சிதம்பரமும், கோவை பாராளுமன்ற உறுப்பினர் குப்புசாமியும் அ.தி.மு.க. 'தொண்டர்'களால் தாக்கப்பட்ட போது கூட, உறவு அறுந்து விடப் போகிறதே என்பதற்காக வாழப்பாடி அடக்கி வாசித்தார். காவிரிப் பிரச்னையில் வாழப்பாடி தமது அமைச்சர் பதவியை ராஜினாமாச் செய்த போது, 'ஆகா ஓஹோ' வென்று வாழப்பாடியை மேடை போட்டுப் புகழ்ந்து தள்ளி விட்டார்கள் அ.தி.மு..க வினர். அதன் நன்றிக் கடனாகவோ என்னவோ, 'ராஜீவ் உயிர் நீத்ததால் மட்டும் நான் வெற்றி பெறவில்லை!' என்று மதுரையில் ஜெ. பேசியதைக் கூட, கடுமையாகக் கண்டிக்காமல் இருந்தார் வாழப்பாடி.

அதே நேரத்தில் மூப்பனார் ஆதரவாளர்கள் 'தன்மானத்தைக் காப்பாற்ற' சென்னையில் ஒன்றுகூடி, வாழப்பாடியையும் ஜெவையும் ஒரு பிடி பிடித்தார்கள். ஆயினும் வாழப்பாடியின் அ.தி.மு.க. ஆதரவு நிலைதான் அவருக்குத் தலைமையைக் காப்பாற்றிக் கொள்ளும் தகுதியைக் கொடுத்தது.

ஒரு காலகட்டத்தில் 'அ.தி.மு.க.தான் ஜெ - ஜெ.தான் அ.தி.மு.க.' என்று வலியுறுத்திக் கூறியவர், இன்று 'ஜெ. இல்லாத அ.தி.மு.க.வுடன் கூட்டு வைத்துக் கொள்வோம்' என்கிற அளவுக்குத் தமது நிலையை மாற்றிக் கொண்டிருக்கிறார்!

சென்ற வருடம் நவம்பர் மாதம்தான் முதல் முறையாக அ.தி.மு.க.வையும், ஜெயலலிதாவையும் எதிர்த்து கருத்துச் சொல்லும் நிலை வாழப்பாடிக்கு ஏற்பட்டது. தேசிய ஒருமைப்பாட்டுக் கூட்டத்தில், 'அயோத்தி கரசேவையை அனுமதிக்க வேண்டும்' என்று ஜெ. பேசிய போது, அதை எதிர்த்துக் கடுமையாக அறிக்கை விட்டவர் வாழப்பாடி.

சுப்பிரமணிய சுவாமி தமிழக அரசியலுக்கு வந்து, 'சொதப்பத்' துவங்கிய நேரம் அது. தங்கள் கட்சியை உடைக்கவும், ஆட்சியைக் கலைக்கவும், காங்கிரஸார் சுவாமியைத் தூண்டி விட்டுள்ளனர் என்ற சந்தேகப் பார்வையினால் காங்கிரஸை ஒரு பிடி பிடித்த ஜெ. கடைசியாக, 'உறவு முறிந்தது' என்று அறிவிக்க, மோதலுக்கான களம் தயாரானது.

இந்தச் சூழ்நிலையில் வாழப்பாடி எடுத்த நிலை எல்லோரையும் ஆச்சரியப்பட வைத்தது. அதுவரை மூப்பனாரைக் கடுமையாக எதிர்த்துக் கொண்டிருந்தவர் சமரசம் செய்து கொண்டார். காங்கிரஸ் மேலிடம் கவலையுற்று, மோதிலால் வோராவையும் தங்கபாலுவையும் அனுப்பி, அ.தி.மு.க.வுடன்உள்ள உறவு நிலைமையைச் சரிசெய்யப் பார்த்தது. ஆனால் எதிர்க் கட்சித் தலைவர் எஸ். ஆர். பாலசுப்ரமணியம் தலைமையில், எல்லா சட்டமன்ற உறுப்பினர்களும், 'அ.தி.



* மூப்பனார்
* தங்கபாலு

மு.க.வுடன் உறவு கூடாது' என்கிற தீவிரமான நிலையை எடுக்கவே, மேலிடத் தூதர்கள் எந்தப் பலனும் இன்றித் திரும்பிப் போனார்கள். ஒன்றுபட்ட காங்கிரஸ் கோஷ்டிகள், முன்னை விடத் தீவிரமாக அ.தி.மு.க. அரசையும், ஜெ.வையும் எதிர்க்கத் துவங்கின.


* ஜெயலலிதா


* நரசிம்மராவ்

ஆனால், அந்தக் கட்டத்தில், வாழப்பாடி பா.ம.க. தலைவர் ராமதாஸைச் சந்தித்த விஷயம், காங்கிரஸ் வட்டாரத்திலேயே அவருக்குப் பெரும் எதிர்ப்பைத் தோற்றுவிக்க வழிவகுத்து விட்டது. ''டில்லி தலைமைக்குத் தவறான தகவல்கள் தருகிறார்'' என்று தங்கபாலு தலைமையில் செல்வராஜ், சிங்காரம், ஜீவந் சர்புதீன் போன்ற எம்.எல்.ஏக்கள், கூறியதுடன் 'ராஜீ

# வாழப்பாடி?

வைக் கொன்ற விடுதலைப் புலிகளுக்கு ஆதரவு தரும் பா.ம.கவுடன் உறவா?' என்று கேட்டுக் கடுமையாக எதிர்த்தனர். அது காரணமாக உறவு இல்லை என்று மேலிடமே அறிவித்து விட்டது. ஆயினும் அப்போதே வாழப்பாடியை எதிர்த்து ஒரு புதுக் கோஷ்டி உருவாகி விட்டது.

''ஒரு கட்டத்தில், அ.தி.மு.க.வுடன் அனுசரித்துக் கொண்டு போவோம் என்ற மனோபாவம் டில்லியில் கட்சித் தலைமைக்கு இருந்ததென்னவோ உண்மைதான். ஆனால், எப்போது நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின் போது காங்கிரஸுக்கு எதிராக அ.தி.மு.க. வாக்களித்ததோ அன்றே அவர்களை ஓரங்கட்டத் துவங்கி விட்டார் பிரதமர். இனி, ஜெ. எப்படி முயன்றாலும் உறவு வராது!'' என்கிறார், டில்லியில் செல்வாக்குள்ள காங்கிரஸின் முன்னாள் எம்.பி. ஒருவர்.

வாழப்பாடியை நீக்குவதற்கான முக்கிய வேலைகளில் ஈடுபட்டு, சூடான அறிக்கைகளைக் கொடுத்து வரும் கோவை எம்.எல்.ஏ. செல்வராஜ், ''நரசிம்மராவுக்கு எதிராகச் செயல்படும் வாழப்பாடி உடனே தாமாகவே பதவி விலக வேண்டும், இல்லையேல் நீக்கப்படுவார்!'' என்று உறுதியாகச் சொல்கிறார்.

''காமராஜ் காலத்திலேயே கட்சிக்குள் கருத்து வேறுபாடுகள் இருக்கத்தான் செய்தன. ஆனால் கட்சிக்காரர்களை அவர் மதித்தார். கலந்து பேசினார். ஆனால் வாழப்பாடி, யாரையும் கலந்து பேசுவதில்லை. தம் இஷ்டத்துக்குச் செயல்பட்டு அறிக்கை விடுகிறார். இவருக்கு மிக வேண்டிய எட்டு எம்.பிக்கள், ஹர்ஷத் மேத்தா விவகாரத்தில், 'நரசிம்மராவ் பணம் வாங்கவில்லை என்று நிருபிக்க வேண்டும்' என்று அறிக்கை விட்டார்கள். தவிர, மூப்பனாருக்கு எந்தப் பதவியும் கொடுக்கக் கூடாது என்றும், அவர்களே அறிக்கை வெளியிட்டார்கள். இதற்கெல்லாம் தூண்டுதலாயிருந்தவர் வாழப்பாடிதான்.

''பழநி, ராணிப்பேட்டைத் தேர்தல்களில் காங்கிரஸ் தோற்றதற்கும் இவர்தான் காரணம். குறிப்பாக தி.மு.க.வுடன் உடன்


* செல்வராஜ்


* போளூர் வரதன்

பாடு செய்து கொண்டு, ராணிப்பேட்டை யில் எங்கள் வேட்பாளரை வாபஸ் பெறச் செய்து விட்டார். இவரைத் தலைவராக வைத்துக் கொண்டு கட்சித் தேர்தலை நேர் மையான முறையில் நடத்தவே முடியாது!'' என்று சொல்லும் செல்வராஜ், ''மற்ற கட்சிகளோடு உறவு வைத்துக் கொள்வது பற்றி மேலிடம்தான் முடிவு செய்யுமே தவிர, மாநிலத் தலைமையல்ல'' என்கிறார்.

செல்வராஜின் குற்றச்சாட்டுக்களை தீவிரமாக மறுக்கிறார் சட்டமன்ற உறுப்பி னர் போளூர் வரதன். ''பழனி தேர்தலில், மூப்பனாரும், வாழப்பாடியாரும் ஒன்று பட்டு உழைத்ததனால்தான் இவ்வளவு வாக் குகள் பெற முடிந்தது. குறைகூறும் இந்தப் பேர்வழிகள் பிரசாரத்திற்கு வராமல் எங்கே போனார்களாம்? ராணிப்பேட்டை தேர்த லில், துளசி நாயக்கரை தி.மு.க.வுக்கு ஆதர வாக வாழப்பாடியார் வாபஸ் பெற வைத் திருந்தால், தி.மு.க. அல்லவோ வெற்றி பெற்றிருக்க வேண்டும்? மேலிடத்தை மீறி வாழப்பாடியார் ஒன்றும் செய்வதில்லை. ஆனால் இவர்கள் எங்கள் சட்டமன்றத் தலைவர் எஸ்.ஆர்.பி. சொற்படி கேட்டு நடப்பதுண்டா? இவர்களில் சிலர், வாழப் பாடியாருக்கும் - மூப்பனாருக்கும் இடை யில் சண்டை மூட்டி விடப் பார்க்கிறார்கள். கட்சித் தேர்தலை நடத்தப் போகிறவர் மேலிடப் பார்வையாளர். வாழப்பாடிக்கும் கட்சித் தேர்தல் நடத்துவதற்கும் தொடர்பே இல்லை. இவர்கள் ஏதாவது சாக்கு சொன் னால் தேர்தலைக் கண்டு பயப்படுகிறார்கள் என்றுதான் எடுத்துக் கொள்ள வேண்டும்!'' என்கிறார் போளூர் வரதன்.

''அ.தி.மு.க.வுடன் உறவு கொள்வது பற்றி திறந்த மனப்பான்மையுடன்தான் இருக்கிறார் பிரதமர்'' என்றார் மத்திய அமைச்சர் ஒருவர். தமிழ்நாட்டைச் சேர்ந்த தொழிலதிபர் ஒருவர் மூலமாகவும் உறவுக் குப் பேச்சு வார்த்தை நடக்கிறதாம். சிதம்ப ரத்தின் வலது கையான எம்.எல்.ஏ. ரங்க

**கேள்வி :** இப்போது தமிழ்நாடு காங்கிரஸில் தோன்றியுள்ள சலசலப்பு களுக்கு என்ன காரணம்?

**வாழப்பாடி ராமமூர்த்தி :** பல் வேறு ஊழல் புகார்களில் சிக்கிக் கொண்டு, பொது மக்களின் ஆதரவை வேகமாக இழந்து வரும் ஜெயலலிதா, முக்கிய எதிர்க்கட்சிகளில் பிளவுகளை உண்டாக்கி, மக்களின் கவனத் தைத் திசைதிருப்ப முயற்சி செய்கிறார். தி.மு.க.வைப் பொறுத்த வரை அவர் வெற்றியடைந்து விட் டார். காங்கிரஸில் நான் மாநிலத் தலை வராக இருக்கும் வரை காங்கிரஸுடன்



நான் மாநிலத் தலைவராக இருக்கும் வரை காங்-அ.தி.மு.க. கூட்டு சாத்தியமில்லை!

உறவு சாத்தியமில்லை என்பது அவருக்குத் தெரியும். பழனி, ராணிப்பேட்டை தேர்தல்களில் அதிகார துஷ்பிரயோகம் செய் தும் பணத்தைத் தண்ணீராகச் செலவழித்தும் வாங்கிய வோட் டுக்கள், ஜெ.வின் செல்வாக்குக் குறைந்து வருவதையே காட்டு கின்றன. மேலும், அந்நியச்

நாதன் நட்சத்திர ஹோட்டலில் விருந்து கொடுத்ததற்குக் காரணம் கூட மூப்பனார் கோஷ்டி எம்.எல்.ஏக்களை வளைத்துப் போடத்தான் என்று சொல்கிறார்கள்.

''மூப்பனார், கட்சி நன்மையைக் கருத்தில் கொண்டு, ஒற்றுமையாகச் செயல்பட விரும்பினாலும், வாழப்பாடியார் அவருக்கெதிரான சதிவேலைகளில் ஈடுபடுகிறார். இதனால்தான் வாழப்பாடியாரை நீக்க நாங்கள் விரும்புகிறோம்'' என்கிறார் மூப்பனார் ஆதரவு எம்.எல்.ஏ. ஒருவர்.

''இடைத் தேர்தல்களில் காங்கிரஸ் தோற்றால், அதற்குத் தலைவர் பொறுப்பேற்றுக் கொள்வது மரபு. மரகதம் சந்திரசேகர், எம்.பி. சுப்பிரமணியம் போன்றோர் இடைத் தேர்தல் தோல்விக்குப் பிறகு ராஜினாமா செய்துள்ளார்கள். அந்த வகையில் பழனி, ராணிப்பேட்டை தொகுதியில் காங்கிரஸ் தோற்றதற்காக, வாழப்பாடி ராஜினாமா செய்திருக்க வேண்டும்!'' என்கிறார் மூத்த தலைவர் ஒருவர்.

ஆனால், வாழப்பாடி எதற்கும் மசிவதாக இல்லை. ''உட்கட்சித் தேர்தலின் மூலம் புதிய தலைவரைத் தேர்ந்தெடுக்கும் வரை, நான்தான் தலைவர்!'' என்று அடித்துக் கூறுகிறார்.

அப்படியின்றி வாழப்பாடி மேலிடத்தினால் தூக்கி எறியப்படுகிறார் என்றே வைத்துக் கொண்டாலும், உடனே கட்சிக்குள் அவரது கோஷ்டி புதிய தலைமைக்கு எதிர்ப்பைக் காட்ட ஆரம்பிக்கும். இன்று எந்த அ.தி.மு.க.வை ஜன்மப் பகை போல் கருதுகிறாரோ, அவர்கள் ஆதரவைத் திரும்பப் பெற்று மீண்டும் காங்கிரஸ் தலைமைப் பதவிக்கு வர வாழப்பாடி முயற்சி செய்தாலும் செய்வார்! இந்திய அரசியலில் எதுதான் நடக்காது!

- ப்ரியன்

அட்டை வண்ணப்படம் :
டி. ராமமூர்த்தி

செலாவணி ஊழல் போன்ற பல மோசடிகளிலிருந்து தப்பிக்க மத்திய அரசின் நிழல் அவருக்குத் தேவைப்படுகிறது. ஆகவே என்னைத் தமிழக காங்கிரஸ் தலைவர் பதவியிலிருந்து அகற்றுவதன் மூலம், காங்கிரஸுடன் நெருங்கி வர முடியுமென்று அவர் கருதுகிறார். அதற்காகவே காங்கிரஸில் சில குட்டித் தம்பிரான்களைத் தூண்டி விட்டுக் கொண்டு இருக்கிறார். அவர்களும் அவருக்காக நன்றியோடு உழைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்றால் பிரதிபலன் கருதாமலா இருக்கும்? பிரதமர் மாநில காங்கிரஸின் நிர்வாக அமைப்பை மதிப்பவர். எங்களின் கருத்தை மீறி அவர் எதுவும் செய்ய மாட்டார். கட்சியில் நிர்வாகிகள் தேர்தல் நடைபெற இருக்கிறது. அதுவரையில் மாநிலத் தலைவரை மாற்றக் கூடாது என்று காரியக் கமிட்டியில் தீர்மானமே போட்டிருக்கிறார்கள். கட்சித் தலைமையை எதிர்த்து நான் செயல்படுகிறேன் என்ற குற்றச்சாட்டு என்னை எதிர்க்க ஒரு நொண்டிச் சாக்கு; அவ்வளவே!

**கேள்வி :** பா.ம.கவுடன் நீங்கள் உறவுக்கு முயற்சி செய்ததுதான் சில குறிப்பிட்ட சட்டமன்ற உறுப்பினர்களின் எதிர்ப்புக்குக் காரணம் என்று சொல்லப்படுகிறதே?

**வாழப்பாடி :** சுமார் 25 சதவீத வாக்குகளைக் காங்கிரஸ் தொடர்ந்து பெற்று வருகிறது. இன்னமும் ஒரு பத்து சதவீதம் கூடுதல் பெற்றால் ஆளும் கட்சியாக வரும் வாய்ப்பு உண்டு. தி.மு.க., அ.தி.மு.க.வைத் தவிர்த்து, அந்த பத்து சதவீதத்தை எந்தக் கட்சிகளுடன் சேர்ந்தால் பெறலாம் என்று யோசிக்கும் போதுதான் பா.ம.க. போன்ற கட்சிகள் கவனத்துக்கு வருகின்றன. இந்த அடிப்படையில் சொல்லப்பட்ட யோசனை, தலைமையால் நிராகரிக்கப்பட்டது. அதோடு சரி. என்னுடைய யோசனை ஓர் உரத்த சிந்தனை. விவாதத்துக்கு வழிவகுப்பது. என்றாலும் என் நோக்கம் எவ்வழியோ மாநிலத்தில் காங்கிரஸ் ஆட்சிக்கு வர வேண்டுமென்பதுதான்.

**கேள்வி :** மூப்பனார் ஆதரவு எம்.எல்.ஏக்கள் பலர், ரங்கநாதன் விருந்தில் கலந்து கொண்டார்களே!

**வாழப்பாடி :** எதற்காக விருந்து என்று சொல்லாமலே அவர் அழைக்கப் போய், என்னைச் சேர்ந்தவர்கள் உட்பட பலர் அங்கே சென்றார்கள். ஆனால் இப்போது ரங்கநாதனது நோக்கம் தெரிந்து விட்டபடியால் இன்னொரு முறை அவர் விருந்துக்குக் கூப்பிட்டால் யாரும் செல்ல மாட்டார்கள். மூப்பனாரும் நானும் கலந்தாலோசித்துத்தான் செயல்படுகிறோம்.

# முருகனுக்குக் கருணாநிதி அனுப்பிய செய்தி!



✱ டி. ஆர். சுந்தரம்



✱ கே. பி. சுந்தராம்பாள்



✱ முக்தா சீனிவாசன்

●● ஒரு படத்தில் பி.கே. சரஸ்வதி கடைக்குப் போக வீட்டிலிருந்து புறப்படும் காட்சியையும், கடைக்குப் போய் விட்டுச் சாமான்களோடு வீட்டுக்குத் திரும்பும் காட்சியையும் ஒரு வாரத்துக்கு முன்பு எடுத்தாகி விட்டது. ரோட்டில் நடந்து கடைக்குப் போகும் காட்சியை இன்று எடுக்க வேண்டும். மூன்றாவது உதவியாளர் முதல் உதவியாளரிடம் 'ஏங்க, பிராப்பர்ட்டீஸ் லிஸ்ட்லே பூ எழுத நீங்க மறந்திட்டீங்க. வீட்டு சீன்லே சரஸ்வதி பூ வச்சிக்கிட்டுப் புறப்பட்டிருக்காங்க. ரோட் சீன்லே பூ இல்லேன்னா எப்படி? கண்டின்யுட்டி தப்பில்லையா?'' என்று கேட்கிறார். அதற்கு முதல் உதவியாளர் 'லாங் ஷாட்டிலே ஒண்ணும் தெரியாதுப்பா' என்று அடக்கி விட்டார். டைரக்டர் லொக்கேஷனுக்கு வருகிறார். முதல் ஷாட்டை குளோஸ் ஷாட்டாக வைக்கிறார். முதல் உதவியாளரும் மூன்றாவது உதவியாளரும் பேந்தப் பேந்த விழிக்கிறார்கள். டைரக்டரிடம் மூன்றாவது உதவியாளர் போய் 'கண்டின்யுட்டி பூ இல்லை' என்று தெரிவிக்க, டைரக்டர் தன்னுடைய கையில் வைத்திருந்த 'இரவில் சொல்லிய அராபியக் கதைகள்' என்ற தடித்த புத்தகத்தினால் அவர் மண்டையில் ஓங்கி அடிக்கிறார். அவர் அழுது கொண்டே வெளியே வருகிறார். அப்படி அடி வாங்கியது (முக்தா சீனிவாசனாகிய) நான்தான். அடித்தது டி. ஆர். சுந்தரம். படம் 'ஆதித்தன் கனவு'.

●● கலைஞர் கருணாநிதி சிலப்பதிகாரத்தைப் 'பூம்புகார்' என்கிற தலைப்பில் படமாக்க விரும்பினார். அதில் கே.பி. சுந்தராம்பாளைக் கௌந்தி அடிகள் வேடத்தில் நடிக்க வைக்க விரும்பினார்.



✱ கருணாநிதி

ஆகவே அவருடைய வீட்டுக்குச் சென்று கேட்டார். கலைஞர் நாஸ்திகர். கே.பி.எஸ். படு ஆஸ்திகர். அதனால் அம்மாவுக்கு நடிக்கப் பிரியமில்லை. 'முருகன் உத்தரவு இருந்தால் பார்க்கலாம்' என்று கலைஞரிடம் கூறினார். அதற்குக் கலைஞர் ''முருகனும், நானும் மாறுபட்ட கருத்துடையவர்கள். அவரை நான் நம்புவதில்லை. என்னை அவர் நம்புவதில்லை. ஆயினும் அவர் தமிழ்க் கடவுள். நான் தமிழ் ஆசிரியன். இந்தப் படமே ஒரு தமிழ்த் தொண்டு. உங்கள் முருகனிடம், ஒரு கலைஞனின் தமிழ்த் தொண்டைத் தடுக்க வேண்டாம் என்று நான் கூறியதாகத் தெரியப்படுத்துங்கள். அவர் அனுமதி கொடுத்து விடுவார். நாளை சந்திக்கிறேன்'' என்று கூறி விட்டு வந்துவிட்டார். மறுநாள் சுந்தராம்பாள் ஃபோன் செய்து கலைஞர் படத்தில் நடிக்க ஒப்புதல் தெரிவித்தார்.

(தமிழ்த் திரைப்படத்தின் அறுபத்திரண்டு ஆண்டுகளை ''டைம் மெஷின்'' மாதிரி கண்முன் கொண்டு வந்து நிறுத்தும் காலக் கட்டுரைகள் முக்தா வி. சீனிவாசன் எழுதியுள்ள ''தமிழ்த் திரைப்பட வரலாறு.'' விலை ரூ. 100 - வெளியீடு கங்கை புத்தக நிலையம், சென்னை - 17.)

- பாலன். பூங்குழலி



# ஸ்ரீ கந்தசுவாமி
## பர்மனெண்ட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம். துவக்கம்:1990
பதிவு அலுவலகம்:60, சாமிபண்டாரம் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-600 002.
கிளை அலுவலகம்:36, ஜீனிஸ் ரோடு, சென்னை-600 015.

## பிக்சட் டிபாசிட் திட்டம்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | *5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

மாத வட்டிக்கான செக்குகள் முன்கூட்டியே கொடுக்கப்படும் உங்கள் டிபாசிட்டுகள் 45 மாதங்களில் 2 மடங்காகிறது 90 மாதங்களில் 4 மடங்காகிறது.

## காமதேனு மணி பேக் திட்டம்

| வைப்புத்தொகை | முதல் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை | இரண்டாம் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை | மூன்றாம் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை |
|---|---|---|---|
| ரூ.6,320/- | ரூ.6,000/- | ரூ.6,000/- | ரூ.56,320/- |
| ரூ.12,640/- | ரூ.12,000/- | ரூ.12,000/- | ரூ.1,12,640/- |
| ரூ.25,280/- | ரூ.24,000/- | ரூ.24,000/- | ரூ.2,25,280/- |
| ரூ.50,560/- | ரூ.48,000/- | ரூ.48,000/- | ரூ.4,50,560/- |

## பொற்குவியல் திட்டம்

ரூ.100 மட்டுமே பிரதி மாதம் செலுத்தி 25 வருட முடிவில் ரூ.3,00,000 பெறுவீர்!

## பென்ஷனர் நலத்திட்டம்

வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்

| | | |
|---|---|---|
| ரூ.10,000/-மும் அதற்கு மேலும் | 12 மாதங்கள் | வட்டி 19.5% |
| ரூ.10,000/-க்கு கீழ் | | வட்டி 18.5% |

## ரெக்கரிங் டிபாசிட் திட்டம்

மாதம் ஒன்றுக்கு ரூ.25-ம் அதன் பெருக்கமும் பெற்றுக் கொள்ளப்படும்

| மாதம் | 12 | 24 | 36 | 48 | 60 | 72 | 80 |
|---|---|---|---|---|---|---|---|
| ரூ.100 | 1,320 | 2,860 | 4,720 | 7,200 | 10,050 | 13,400 | 17,500 |

## செல்வக்களஞ்சியம் டிபாசிட் திட்டம்

உங்கள் குழந்தையைக் குபேரனாகக் காண ஆசையா இதோ
ரூ.7500ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ.1,25,000 பெறலாம்
ரூ.9000 ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ.1,50,000 பெறலாம்
சேவிங்ஸ் கணக்குகள் மீது 10% வட்டி

| கடன் | நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ.300/- வழங்கப்படும்.<br>சென்னை மாநகரில் உள்ள கட்டிடங்கள் பேரிலும் வழங்கப்படும் | வட்டி வீதம் ரூ.1.85 |
|---|---|---|

(Friday Weekly Holiday)
பங்குதாரர்களுக்கு மட்டும்
Business Hours
Week Days 9 A.M. - 12 Noon &
2.30 P.M. - 6.00 P.M.

சேர்மன் P. பாலசுப்பிரமணியம் B.Sc.
சீனியர் டிரஸ்டி
ஸ்ரீ கந்தகோட்டம்
சென்னை-3.

உறுப்பினர்களுக்குப் பாதுகாப்பு பெட்டக வசதி உண்டு.

SURESH

# யூதர்கள் நகருக்கு



* யூதர் திருக்கோயிலை ஒட்டி இந்து கோயில்.

கொச்சி நகரத்துக்குள் ஒரு குட்டி இஸ்ரேல் இருக்கிறது.

இரண்டு பாலங்களைக் கடந்து, மட்டாஞ்சேரி பகுதிக்குப் போனால், மலைத் தோட்டப் பயிர்களை ஏற்றுமதி செய்யும் குஜராத்தி வியாபாரிகளின் கடைகள், சென்னையிலுள்ள கோவிந்தப்ப நாயக்கன் தெருவையும், ஜார்ஜ் டவுன் பகுதியையும் நினைவுபடுத்துகின்றன.

கொஞ்சம் கடந்து சென்றால் - JEWS TOWN!

யூதர்களின் குடியிருப்புகள் நிறைந்த தெரு.

''இப்போது மொத்தமே ஏழு குடும்பங்கள்தான் இங்கே இருக்கின்றன. ஏழு குடும்பங்களிலுமாகச் சேர்ந்து மொத்தமே இருபத்திரண்டு பேர்தான்! பல குடும்பங்கள் இஸ்ரேலுக்கே போய்விட்டன. காரணம், திருமணம் செய்து கொள்ளும் நிலை வரும் பொழுது இங்கே வரன் கிடைப்பதில்லை - இங்கே கலப்புத் திருமணங்கள் அனுமதிக்கப்படுவதில்லை!'' என்கிறார் இங்கேயே பிறந்து வளர்ந்த யூதர் சேலம். சேலம் வேட்டியை மடித்துக் கட்டிக் கொண்டு நிற்கிறதைப் பார்த்தால் யாரும் அசல் கேரளத்துக்காரர் என்றே சொல்லுவார்கள்.



* உள்ளூர்வாசியாகி விட்ட யூதர் - சேலம்

இருபத்திரண்டு பேரில் பலரும் அரசு உத்தியோகத்தில் இருக்கிறார்கள். சில டாக்டர்கள், வழக்கறிஞர்கள், இஞ்ஜினீயர்களும் உண்டு. கல்லூரிக்குப் போய் வரும் இரண்டு பெண்களும் இருக்கிறார்கள்.

''இன்னும் இருபது வருடங்களுக்குப் பிறகு எங்கள் யூத குடும்பத்தினர் யாருமே இங்கே இருக்க வாய்ப்பில்லை!'' என்றார் சேலம்.

''நீங்கள் வீட்டில் என்ன மொழி பேசுகிறீர்கள்?''

''மலையாளம்தான். ஹீப்ரு மொழி அதிகப் பழக்கமில்லை - குறிப்பிட்ட சில பேரைத் தவிர!'' என்கிறார் சேலம். இவர் 35 வருடங்கள் அயல்நாடுகளில் வேலை பார்த்துவிட்டு இப்போது தான் திரும்பியிருக்கிறார். மகன்-மகள் எல்லாம் கனடாவில்.

சினகாக் எனப்படும் யூதர் கோயில் இங்கே இருக்கிறது. 1568 - ல் கட்டப்பட்டது. பிரிட்டிஷ் காமன்வெல்த் நாடுகளில் உள்ள கோயில்களிலேயே இதுதான் மிகப் பழமையானதாம்.

ஆயிரத்து நூறு வகை ஓடுகள் பதித்த, சீன வண்ண ஓவியங்கள் அலங்கரிக்கும் சுவர்கள், தளங்கள். இவற்றின் வயது 238

வருடங்கள்! நூறு வருடங்களுக்கு முன் கொண்டு வந்து வைக்கப்பட்ட விளக்குகளும், பிரம்மாண்ட மெழுகுவர்த்திகளும் உண்டு.

வெள்ளிக்கிழமை, சனிக்கிழமைகளில், முறையே மாலை ஆறரை மணிக்கும் காலை எட்டரை மணிக்கும் பிரார்த்தனை நேரம். வெளியார் யாரும் அப்போது அனுமதிக்கப்படுவதில்லை.

இந்தப் பிரசித்தி பெற்ற யூதர் கோவிலைப் பார்ப்பதற்கு என்றே வரும் ஏராள அயல்நாட்டுப் பயணிகள். இவர்கள் வருகிறார்கள் என்பதற்காகவே இந்தத் தெரு முழுக்க, கிட்டத்தட்ட எல்லாக் கடைகளுமே, கலைப் பொருட்கள் விற்பனை செய்கின்றன. கூசாமல் யானை விலை, குதிரை விலை சொல்லுகிறார்கள். (யானை பொம்மைக்கும், குதிரை பொம்மைக்கும் கூட!)

# ஒரு விசிட்!



* யூதர் தெரு - முழுக்க முழுக்க கலைப் பொருட்கள் விற்பனைக் கடைகள்....

"இஸ்ரேலிலிருந்தே நிறையப் பேர் வந்து போகிறார்கள்!" என்கிறார் சேலம்.

கோவிலில் பூசாரி என்று யாருமே கிடையாது. யார் விவரம் தெரிந்தவராய் இருக்கிறாரோ, அவரே பிரார்த்தனையை நடத்தலாம். (பூசாரியை 'ரபாய்' என்கிறார்கள்.)

ஆனால் பிரார்த்தனை நடத்த வேண்டுமானால், குறைந்தபட்சம் பத்து ஆண்களாவது அங்கே இருக்க வேண்டுமாம். ஒருவர் குறைந்தாலும் பிரார்த்தனை கிடையாது!

மாலை ஆறு மணி ஆகிவிட்டாலே, மறுநாள் விடிந்த மாதிரி கணக்கிட்டு விடுகிறார்கள்!

"கோவிலைப் பாதுகாப்பது யார்?"

"அதற்கு ஒரு வார்டன் இருக்கிறார்."

செப்டம்பர் மத்தியில்தான் புதுவருடப் பிறப்பு கொண்டாடுவார்களாம். ஒவ்வொரு மாதமும் 28, 29 அல்லது 30 நாட்கள் தான். 31 நாள் கிடையாது. எனவே இவர்களுக்கு மூன்று ஆண்டுக்கு ஒரு லீப் இயர் வரும்!

டே அஃப் அடோன்மென்ட், ஃபீஸ்ட் அஃப் டபனாக்கல் (பந்தல் பெருநாள்), ரிஜாய்சிங் அஃப் த தோரா இவை மூன்றும் கூட யூதர்களுக்கு முக்கிய தினங்கள். முதலாவது, இஸ்ரேல்-எகிப்து போருக்குப் பின் அநுசரிக்கப்படுகிறது.

"தோரா என்றால்?"

"பைபிளின் பழைய ஏற்பாடு. மோஸஸின் ஐந்து புத்தகங்கள்."

இஸ்ரேலியர்கள் இங்கே எப்படி வந்து குடியேறினார்கள்? வணிகமே இவர்களை இங்கே கொண்டு வந்து சேர்த்தது. முதலில் க்ராங்கனூரில் தான் இறங்கினார்களாம்.

தந்தம், மிளகு போன்ற பொருட்களை வாங்கிப் போகத் துவங்கிய வியாபாரம், சாலமன் அரசன் காலத்தில் தழைத்து ஓங்கியதாம்.

"சமீபத்திய இஸ்ரேல்-பாலஸ்தீன ஒப்பந்தம் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?"

"வ ர வே ற் க த் தக்க ஒப்பந்தம்!" என்கிறார் சேலம். இவர் பல முறை இஸ்ரேலுக்குச் சென்று வந்திருக்கிறார்.

சினகாக் எனப்படும் இந்த யூதர் கோவிலையும், அடுத்து இருக்கிற இந்துக் கோவிலான அம்பலத்தையும் ஒரே ஒரு சுவர்தான் பிரிக்கிறது!

சாரி சாரியாக வந்து போய்க் கொண்டிருக்கும் பல அயல்நாட்டுப் பயணிகளில், ஜெர்மனியைச் சேர்ந்த மோனிகாவும், காட்யாவும் அம்பலத்தின் முன் நின்று வியந்து போய்ப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்!

- சாருகேசி
படங்கள் : யோகா

ராஜாராமய்யரும் தங்கம்மாளும் பேசிக் கொண்டிருந்த போது, வாசலில் வண்டி நின்ற சப்தமும், ஸ்ரீதரனும் அவனுடைய 'தோழ'னும், இறங்கி உள்ளே வந்த சப்தமும் அவர்கள் காதில் விழவில்லை. அடுத்த அறையில் வாசற்படிக்கு அருகில் நின்றபடி ஸ்ரீதரன் அவர்களுடைய சம்பாஷணையைச் சற்று நேரம் ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்தான். 'பெரிய சங்கடத்தில் மாட்டிக் கொண்டு விட்டோமே? எப்படியாவது இந்தப் பிரயாணம் தடைப்பட்டு விடக் கூடாதா?' என்று எண்ணிக் கொண்டிருந்தவனுக்கு, "அது எப்படிப் போறது?" என்று தங்கம்மாள் சொன்னதைக் கேட்டதும் அளவிலாத குதூகலம் உண்டாயிற்று. ஆனால், அதைச் சிறிதும் வெளியில் காட்டிக் கொள்ளாமல், முகத்தைக் கடுகடுப்பாக வைத்துக் கொண்டே அப்பாவும் அம்மாவும் இருந்த அறைக்குள் வந்தான். ஒரு வார்த்தையும் பேசாமல், அப்பாவையும் அம்மாவையும் வெறிக்கப் பார்த்துவிட்டு, "ஒரு பிள்ளைக்கு அவன் தாயார் தகப்பனாரே சத்துருக்களாயிருந்தால், என்ன தான் செய்யறது?" என்றான்.

ராஜாராமய்யர், "என்னடா உளர்றே? நான் என்னடா பண்ணினேன் உனக்கு?" என்றார்.

"ஆமாம், அப்பா! நீங்க ஒண்ணும் பண்ணலை! இந்தக் கல்யாணமே வேண்டாம்னு நான் அப்பவே அடிச்சண்டேனா, இல்லையா? கல்யாணத்தன்னிக்குக் காலம்பரக் கூட, இந்தப் பட்டிக்காட்டுச் சம்பந்தம் வேண்டாம், புறப்பட்டுப் போயிடுவோம்னு முட்டிண்டேன். இரண்டு பேருமாச் சேர்ந்து பணத்துக்கு ஆசைப்பட்டுண்டு பலவந்தமாப் பண்ணி வச்சயள்."

"அடே, என்னைப் பார்த்துச் சொல்லு! கல்யாண விஷயமாய் ஒரு வார்த்தையாவது உங்கிட்ட நான் சொன்னேனாடா? அம்மா வாச்சு பிள்ளையாச்சு, எப்படியாவது செய்துக்குங்கோன்னு, நான்தான் பேசாம இருந்துட்டேனே?"

"அம்மாதான் இருக்காளே, அம்மா! என்னைக் கெடுக்கறதுக்குன்னு பிறந்திருக்காளே!" என்றான் ஸ்ரீதரன்.

ஏற்கெனவே, தங்கம்மாளுக்குத் தீபாவளிக்குப் போக முடியவில்லையேயென்று துக்கம் அடைத்துக் கொண்டு வந்தது. இப்போது, பிள்ளையாண்டான் மனம் வெறுத்துப் பேசினதைக் கேட்டதும் அவள் விசித்துக் கொண்டே, "அப்படி ஏண்டா சொல்றே, குழந்தை! உனக்கு என்னடா இப்போ வந்துடுத்து? நாளைக்கே நினைச்சா இன்னொரு கல்யாணம் என் குழந்தைக்கு நான் பண்ணிவைக்க மாட்டேனா? எத்தனையோ பேர் 'நான், நீ' என்று பெண் கொடுக்கக் காத்துண்டிருப்பாளே?" என்றாள்.

அதற்கு ஸ்ரீதரன், "என்ன? இன்னொரு கல்யாணமா? சபாஷ்! ஒரு தடவை மரப்பாச்சியைக் கல்யாணம் பண்ணி வச்சாச்சு! இன்னொரு புதுச்சேரிப் பொம்மையையும் கல்யாணம் பண்ணி வச்சுட்டா, ரொம்ப பேஷாய்ப் போய்விடும். அது வேறே நினைச்சுண்டிருக்கயா, நீ?" என்றான்.

ராஜாராமய்யர், "சரிதாண்டா, சரிதான். வேறே வேலை இருந்தாப் பாரு! ஊருக்குப் போகலை, லீவு வேண்டாம்னு துரைக்கு உடனே எழுதிப் போட்டுடு!" என்று சொல்லிவிட்டு, தமது அறைக்குச் சென்றார்.

"அப்பாவுக்கு என்ன, சுலபமாய்ச் சொல்லிவிட்டுப் போயிட்டார். என் சிநேகிதனை அழைச்சுண்டு வந்திருக்கேனே, அதுக்கு என்ன பண்றது? அவா வீட்டிலே போய் ஏன் போகலேன்னு 'எக்ஸ்ப்ளெயின்' பண்ணியாகணும்" என்றான் ஸ்ரீதரன்.

அதே சமயத்தில், அவனுடைய 'சிநேகிதன்' உள்ளே வரவே, தங்கம்மாள் அவனை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, "ஏண்டாப்பா? இவன் என்ன சாதிப் பையன்? முகத்தைப் பார்த்தால் களையாயிருக்கு. தமிழ் பேசத் தெரியுமா?" என்றாள்.

"அவனுக்குத் தமிழ் பேசத் தெரியாது. இங்கிலீஷும், பெங்காலியுந்தான் தெரியும். இந்த ஊர்க்காரன்தான். ஆத்திலேயெல்லாம் சொல்லிண்டு வந்துட்டான். இப்போ எப்படிம்மா அவனைத் திரும்பிப் போகச் சொல்றது?"

"போகச் சொல்வானேன்? தீபாவளிக்கு நம்ம ஆத்திலேயே வேணா இருந்துட்டுப் போகட்டுமே? உனக்கும் துணை வேணுமோல்லியோ?" என்றாள் தங்கம்மாள்.

"ரைட்டோ, அம்மா! ரொம்ப தாங்க்ஸ்!" என்று ஸ்ரீதரன் சொல்லிவிட்டு, அவனுடைய சிநேகிதனைக் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு மேல் மாடிக்

குப் போனான். அங்கே, லலிக்கு நல்ல வார்த்தை சொல்லிச் சமாதானப்படுத்துவதற்குள் அவன் ரொம்பவும் சிரமப்பட்டுப் போனான் என்று சொல்ல வேண்டுமா?

## 20. நாளை தீபாவளி

தீபாவளிக்கு முதல் நாள் காலையில் சாவித்திரி தூக்கத்திலிருந்து எழுந்திருக்கும் போதே, 'நாளைப் பொழுது விடிந்தால் தீபாவளி' என்று எண்ணிக் கொண்டு எழுந்தாள். 'இன்னிக்கு ராத்திரி இவாள் வரப் போறா!' என்ற எண்ணமும் கூட வந்து, அவளுக்கு என்றும் இல்லாத உற்சாகத்தையும் கறுகறுப்பையும் அளித்தது. இரண்டு நாளாகக் கடும் மழை விட்டுச் சற்று நேரம் இளம் வெயில் எறிப்பதும் சற்று நேரம் சிறு தூற்றல் போடுவதுமாக இருந்தது. தீபாவளிக்கு மாப்பிள்ளை வரப் போவதை உத்தேசித்துத்தான் இப்படி இருப்பதாகச்





சாவித்திரி எண்ணிக் கொண்டாள். ஆனால், மழை பலமாகப் பெய்தாலும் அவளுக்கு இப்போது பயம் கிடையாது. ஏனென்றால் அப்பாவிடம் அடிக்கடி சொல்லி, பெரு மழையின் போது ஒழுகிய இடத்தையெல் லாம் ஓடு மாற்றிச் செப்பனிடும்படி செய்து விட்டாள்.

அன்று காலை நேரமெல்லாம் சாவித் திரி, வீட்டின் மூலை முடுக்குகளையெல் லாம் சுத்தம் செய்வதிலும், அழகுபடுத்து வதிலும் ஈடுபட்டிருந்தாள். சுவரில் மாட்டி யிருந்த படங்களை இங்கிருந்து அங்கும் அங்கிருந்து இங்குமாக மாற்றிக் கொண் டிருந்தாள். இன்னும், கோட் ஸ்டாண்டுகள், நிலைக்கண்ணாடிகள் - இவையெல்லாம் எங்கெங்கேயிருந்தால் நன்றாயிருக்கு மென்று பார்த்துப் பார்த்து மாட்டினாள். சுவர் மூலையில் எங்கேயாவது கொஞ்சம் ஒட்டடை காணப்பட்டால், உடனே அதை



"நம்ம கட்சித் தொண்டர்கள் 'எண்ணு'ன்னு சொன்னா, 'எண் ணெய்'யோட வந்து நிற்பாங்க.... தலை வரே."

"அதுக்காக, நான் 'தலைவலி'ன்னு சொன்னதுக்கு, 'சமாதிகட்ட நிதி' வசூல் பண்ணணுமா?"

- வி.சி. கிருஷ்ணரத்னம்.

எடுத்துக் கொல்லையில் தூரக் கொண்டு போய்ப் போட்டு விட்டு வந்தாள். அலமாரி யில் புத்தகங்களை ஒழுங்காக எடுத்துத் தட்டி அடுக்கி வைத்தாள். இடையிடையே, முற்றத்தில் காக்காய் கத்தும் சத்தம் கேட் டால், ஓடிப் போய்க் காக்காயைப் பார்த்து, "ஓகோ! இன்னிக்கு மாப்பிள்ளை வரப் போறார்னு உனக்குத்தான் அதிசயமாய்த் தெரியுமோ? எனக்குத் தெரியாதோ?" என்று அதனுடன் பேசி விட்டு வந்தாள். குறுக்கே நெடுக்கே செவிட்டு வைத்தி போனால், அவனைப் பார்த்து, "அடே! இரண்டு நாளைக்கு கண்ட இடத்தில் எல் லாம் மூக்கைச் சிந்திப் போடாமலிரு! உனக் குப் புண்ணியமாய்ப் போகட்டும்!" என் றாள்.

ஆயிற்று; சூரியன் உச்சிவானத்தைக் கடந்து மேற்புறம் சாயத் தொடங்கிற்றோ, இல்லையோ, சாவித்திரியின் பரபரப்பும் பதின்மடங்கு அதிகமாயிற்று. சம்பு சாஸ் திரியிடம் போய், "அப்பா! ஸ்டேஷனுக்கு வண்டி அனுப்ப வேண்டாமா?" என்று கேட்டாள். அவர், "நீ கவலைப்படாதே, அம்மா! எனக்குத் தெரியாதா? நானே ஸ்டேஷனுக்குப் போய் மாப்பிள்ளையை அழைச்சுண்டு வர்றேன்!" என்றார். ஆனா லும் இன்னும் அரை மணி ஆனதும், சாவித் திரி மறுபடியும் அவரிடம் வந்து, "ஏனப்பா! வண்டி ஓட்டிண்டு போறதுக்கு நல்லான் இன்னும் வர்றலையே?" என்று கேட்டாள்.

"வந்தாச்சு, அம்மா! வண்டி பூட்டிண்டு வர்றதுக்குத்தான் போயிருக்கான்" என்றார் சாஸ்திரியார்.

சுமார் மூன்று மணிக்குச் சம்பு சாஸ்திரி யார் வண்டியில் ஏறிக் கொண்டு புதுச்சத் திரம் ஸ்டேஷனுக்குக் கிளம்பிய பிறகுதான் சாவித்திரியின் மனம் கொஞ்சம் நிம்மதி அடைந்தது. வண்டி தெருக்கோடி வரையில் சென்று மறைந்த பிறகு சாவித்திரி உள்ளே வந்து, அவசர அவசரமாகத் தன்னை அழகு படுத்திக் கொள்ளத் தொடங்கினாள்.

கல்யாணத்தின் போது, "பெண் ரொம்பப் பட்டிக்காடு! அதனால் மாப் பிள்ளைக்குப் பிடிக்கவில்லை" என்ற பேச்சு சாவித்திரியின் காதில் விழுந்த தென்று சொல்லோமல்லவா? "அதெல் லாம் ஒன்றுமில்லை" என்று அப்போது சாஸ்திரி சொன்னதை அவள் பூரணமாய் நம்பினாள். ஆனால், கல்யாணத்திற்குப் பிறகும் ஊரில் சிலர் இம்மாதிரி பேசிக் கொண்டுதான் இருந்தார்கள். ஆகையால், இந்த ஞாபகம் அடிக்கடி சாவித்திரிக்கு வந்து கொண்டிருந்தது. நினைத்துப் பார்க்கப் பார்க்க, ஊரார் சொல்வது வாஸ்த வந்தானே என்றும் தோன்றிற்று. மாப் பிள்ளையின் நாகரிகத்தையும், தன்னுடைய பட்டிக்காட்டு நடை உடை பாவனைகளை யும் அவள் ஒப்பிட்டுப் பார்த்துப் பார்த்து வெட்கம் அடைந்தாள். கல்யாணமாகி நாலாம் நாள் அன்று ஸ்ரீதரன் 'புல் ஸுட்' அணிந்திருந்த போது எடுத்த போட்டோ படம் ஒன்று வீட்டில் இருந்தது. அதை எடுத்து வைத்துக் கொண்டு சாவித்திரி அடிக் கடி பார்ப்பாள். கல்யாணத்தின் போது தனக்குச் செய்திருந்த கர்நாடக அலங் காரத்தை நினைத்தால் அவளுக்குக் கோபம் கோபமாய் வந்தது. 'அவாளுடைய நாக ரிகம் எங்கே? இந்தப் பட்டிக்காட்டுக் கர் நாடகம் எங்கே? என்னைப் பட்டிக்காடு என்பதாக அவாள் வெறுத்தால்தான் எப் படிப் பிசகு ஆகும்?' என்று எண்ணுவாள். அதே சமயத்தில், எப்படியாவது தானும் நாகரிகம் அடைந்து, புருஷனுக்குத் தகுந்த மனைவியாக வேண்டுமென்றும் தீர்மானித் துக் கொள்வாள்.

ஆனால், நாகரிகம் கற்றுக் கொள் வதற்குச் சாவித்திரிக்கு அதிக வசதி இருக்க வில்லை. அந்தத் தாயில்லாப் பெண்ணுக்கு, பட்டிக்காட்டு வழக்கப்படி அழகு செய்து விடுபவர்களே கிடையாது. ''தலைவாரிப் பின்னி விடறயா?'' என்று கேட்டாலே சித்தி எரிந்து விழுவாள். கல்யாணத்துக்கு முன்னெல்லாம் சாவித்திரி இதை அதிக மாகப் பொருட்படுத்தவில்லை. அப்போது தன்னுடைய சொந்த அலங்காரத்தில் அவளுக்குக் கவனமே கிடையாது. பூஜை அறையை அழகுபடுத்துவதிலும், படங் களுக்கு அலங்காரம் செய்வதிலுமே அவ ளுடைய புத்தியெல்லாம் சென்று கொண் டிருந்தது. கல்யாணத்திற்குப் பிறகுதான் தன்னை அழகு செய்து கொள்வதில் சிரத்தை உண்டாயிற்று. தான் புடைவை கட்டிக் கொண்டால் நன்றாயிருக்கிறதா, அல்லது பாவாடையும் தாவணியும் அணிந்து கொண்டால் நன்றாயிருக்கிறதா, தலைப் பின்னலைத் தொங்க விட்டுக் கொண்டால் அழகாயிருக்கிறதா, எடுத்துக் கட்டிக் கொண்டால் அழகாயிருக்கிறதா என் றெல்லாம் நேரம் போவதே தெரியாமல் அவள் சிந்தனை செய்து கொண்டிருப்பாள்.

எங்கேயாவது கல்யாணம், கார்த்தி கைக்குப் போனால், டவுனிலிருந்து வந் திருக்கும் பெண்கள் யாராவது இருக்கிறார் களா என்று அவளுடைய கண்கள் உடனே தேடத் தொடங்கும். அப்படி யாராவது இருந்தால், அவர்கள் எப்படித் தலைவாரிப் பின்னிக் கொண்டிருக்கிறார்கள், எப்படி ஆடை ஆபரணங்கள் அணிந்து கொண்டிருக் கிறார்கள் என்று கவனமாய்ப் பார்ப்பாள். ஒரு தடவை, அத்தகைய பட்டணவாசத்துப் பெண் ஒருத்தி தலைமயிரைக் கோணலாக வகிடு எடுத்துப் பின்னிக் கொண்டிருப் பதைப் பார்த்தாள். அது ரொம்ப அழகா யிருந்தது. வீட்டுக்குப் போனதும், காமிரா உள்ளின் கதவைச் சாத்திக் கொண்டு அந்தப் பெண் மாதிரி தானும் கோண வகிடு எடுத் துக் கொண்டாள். ஆனால், அந்தப் பெண் ணுக்கு அது அழகாயிருந்ததே தவிர, தனக்கு அவ்வளவு அழகாயில்லையென்று தோன் றிற்று. வேறு யாரிடமாவது கேட்கலாமென் றால், யாரைக் கேட்பது? சித்தியிடம் போய்க் கேட்டால், கட்டாயம் விறகுக் கட்டையால் அடி விழும். 'அம்மா, அத்தை, பெரியம்மா, பாட்டி யாராவது ஒருவர் எனக்கு இருக்கக் கூடாதா? என் அதிர்ஷ் டம், எல்லாரும் போய் விட வேண்டுமா?' என்று அப்போது அவளுக்கு ஏக்கம் உண் டாகும்.

மேலும், நாகரிக வாழ்க்கையென்றால் இலேசாயிருக்கிறதா? பணம் செலவழிக் காமல் சாத்தியமாகும் காரியமில்லையே? தனக்கு வேண்டிய சாமான்களைப் பற்றி அப்பாவிடம் பிரஸ்தாபிப்பதற்கும் சாவித் திரிக்கு ரொம்ப சங்கோசமாய்த்தான் இருந் தது. ஆனாலும், அப்பா கும்பகோணம் அல்லது தஞ்சாவூர் போனால், வரும் போது விநோலியா ஸோப்பு, தலை பின்னிக் கொள்வதற்கு டேப்பு - இதெல்லாம் வாங்கிக் கொண்டு வரச் சொல்வாள். அவரும் மறக்காமல், துணியில் முடிச்சுப் போட்டு வைத்திருந்து, குழந்தை கேட் டதை வாங்கிக் கொண்டு வருவார். அவ ளுடைய கையில் ஏற்கெனவே போட்டுக் கொண்டிருந்த தங்கக் காப்பு, கொலுஸு எல்லாவற்றையுங்கூட அழித்து விட்டு மெல்லிய தங்க வளைகளாகப் பண்ணிப் போட்டு விட்டார். இப்படியாக, சாவித்திரி நாகரிக வாழ்க்கையில் அபிவிருத்தி யடைந்து கொண்டு வந்தாள்.

யாரை உத்தேசித்து, யார் பார்த்துச் சந் தோஷப்பட வேண்டுமென்பதற்காக,



''என்ன டாக்டர் சொல்றீங்க... இது செக்ஸ்ரே படமா?''
''ஆமாய்யா... கவர்ச்சி நடிகையோட எக்ஸ்ரே படம்!''
- அம்பை தேவா.

சாவித்திரி ஆடை அலங்காரங்களில் இவ் வளவு கவனம் செலுத்தினாளோ, அப்படிப் பட்டவர் இன்று ராத்திரி வருவதற்கு இருந் தார். எனவே, சாவித்திரி பூமியிலேயே நிற் காமல் குதித்துக் கொண்டிருந்ததில் ஆச்சரிய மில்லையல்லவா?

அவாள் வருவதற்காக 'ஸ்பெஷ'லாய் அலங்காரம் செய்து கொண்டதாகவும் இருக்கக் கூடாது, ஆனால் அவாள் பார்த்த தும், 'இது யாரோ புது சாவித்திரி' என்று பிரமித்துப் போகும்படியாகவும் இருக்க வேண்டும் என்று சாவித்திரி எண்ணினாள். ஏற்கெனவே, வாரிப் பின்னியிருந்த தலையை மறுபடியும் வாரி விட்டுச் சரிப் படுத்திக் கொண்டாள். காலையிலிருந்து முப்பது தடவை அலம்பியான முகத்தை மறுபடி ஸோப்புப் போட்டுத் தேய்த்து அலம்பிக் கொண்டாள். முதலில் சாந்துப் பொட்டு இட்டுக் கொண்டு கண்ணாடியில்

பார்த்தாள். அதை அழித்து விட்டுக் குங்குமப் பொட்டு வைத்துக் கொண்டாள். அது பெரிதாய்ப் போய் விட்டதென்று அழித்து விட்டு, மறுபடி சின்னதாய் இட்டுக் கொண்டாள். பாவாடை, தாவணியை அவிழ்த்து எறிந்து விட்டுக் கல்யாணப் புடைவையை எடுத்துக் கட்டிக் கொண்டாள். அப்புறம், அவாள் வரும் போது பதினெட்டு முழப் புடைவையைப் புஸ"புஸ"வென்று கட்டிக் கொண்டு நிற்க வேண்டாம், காலையில் தான் எப்படியும் புதுப் புடைவை கட்டிக் கொள்ள வேணுமேயென்று எண்ணி மறுபடியும் பாவாடை தாவணியையே உடுத்திக் கொண்டாள். ஐந்து நிமிஷத்துக்கொரு தடவை கவரில் மாட்டியிருந்த நிலைக் கண்ணாடியின் முன்னால் நின்று அழகு பார்த்துக் கொண்டாள்.

இப்படி என்னவெல்லாமோ செய்தும் பொழுது போகிற வழியாயில்லை. அப்போது பட்டாகக் கட்டு ஞாபகம் வந்தது. பட்டாக, மத்தாப்பூ என்றால் சாவித்திரிக்கு அளவிலாத பிரியம். அவாள் வந்த பிறகு பட்டாக கொளுத்தலாமோ, என்னமோ? அவாளுக்குப் பிடிக்குமோ பிடிக்காதோ? மேலும் அவாள் மட்டும் தனியாய் வரவில்லையே? மாமியாரும் கூட வருகிறாள் அல்லவா? "பச்சைக் குழந்தையா பட்டாக கொளுத்துவதற்கு?" என்று மாமியார் கோபித்துக் கொண்டாலும் கோபித்துக் கொள்ளலாம். ஆகையால், இப்போதே கொஞ்சம் பட்டாக விடலாம் என்று எண்ணி, அலமாரியிலிருந்து பட்டாகக் கட்டுகளை எடுத்துக் கொளுத்திப் போட்டாள், அவை படபடவென்று வெடித்த போது அவளுக்கு வெகு உற்சாகமாயிருந்தது. அப்புறம் தீபாவளிக் கொண்டாட்டத்தைப் பற்றி அவள் இட்டுக் கட்டியிருந்த பாட்டைப் பாடிக் கொண்டே மத்தாப்பூக் களைக் கொளுத்தினாள். அப்போதுதான் சூரியன் அஸ்தமனமாகி விளக்கு ஏற்றும் சமயமாயிருந்தபடியால், மத்தாப்பூக்கள் அவ்வளவு பிரகாசமாய் எரியவில்லை. 'இன்னும் கொஞ்ச நேரமானால் இருட்டி விடும்; மத்தாப்பூ நன்றாய் எரியும்' என்று எண்ணிக் கொண்டாள். இருட்டிச் சற்று நேரத்திற்கெல்லாம் ஸ்டேஷனுக்குப் போன வண்டியும் வந்து விடும் என்பது ஞாபகம் வந்தது. வண்டி வாசலில் வந்து நின்று, மாப்பிள்ளை வண்டியிலிருந்து இறங்கும் போது, இரண்டு பட்டாகக் கட்டை முற்றத்தில் கொளுத்திப் போட்டுப் படபடவென்று வெடிக்கப் பண்ணலாமா என்ற எண்ணம் தோன்றிய போது அவளுக்குக் கலகலவென்று சிரிப்பு வந்தது.

இப்படி எண்ணியதும், உடனே இன்னொரு ஞாபகமும் உண்டாயிற்று. மாப்பிள்ளை வந்து இறங்கியதும் அவரை வீதியில் நிற்க வைக்காமல் உடனே ஆலாத்தி எடுக்க வேண்டுமே? சித்தி மஞ்சள் நீர் கரைத்துத் தயாராய் வைத்திருக்கிறாளோ, என்னவோ? போய் விசாரிக்கலாம் என்று நினைத்து, சாவித்திரி சமையலறைக்குச் சென்றாள்.

(தொடரும்)

---

# வி.வி.ஐ.பி. உபேந்திரா!

திருப்பதியில் இவருக்கு "ஜருகண்டி" "ஜருகண்டி" உத்தரவு கிடையாது. ஒரு தடவைக்கு இரண்டு தடவையாக, நிதானமாக, சாமி தரிசனம் செய்தார். இரண்டு வேளை டிஃபன், ஒரு வேளை சாப்பாடு, இடையிடையே டீ, காப்பி எல்லாம் கொடுத்து உபசரித்தார்கள், தேவஸ்தானத்தினர். அப்படி என்ன இவர் வி.வி.ஐ.பி யா? ஒரு வகையில் அப்படித்தான்!



உண்டி எண்ணும் போது பொது மக்களிலிருந்து மூன்று பேர் சாட்சியாக அமர வேண்டும். ஜுலையில் நின்ற ஒரு லட்சம் பேரில் உபேந்திராவுக்கும் கேரளாவிலிருந்து வந்த இரண்டு ஐயப்ப பக்தர்களுக்கும் அடித்தது அதிர்ஷ்டம்! உண்டியல் எண்ணி முடிந்த பிறகு லட்டு வடை பிரசாதம் வேறு கொடுத்து அனுப்பினார்கள்!

தகவல் : ஜூலி.

●● ஒரு சிறைக் கைதி, ஒவ்வொரு முறை தன் பாட்டி சிறைச்சாலைக்கு வந்து அவனைச் சந்தித்து விட்டுச் செல்லும்போதும் போதை மயக்கத்தில் இருந்திருக்கிறான். இது சிறையதிகாரிகளுக்குச் சந்தேகத்தைக் கிளப்பிவிட, அடுத்தமுறை அந்த 81 வயது மூதாட்டியின் சிறை விஜயத்தின் போது அவரது உடைமைகளைச் (கைப்பை, குடை முதலியன) சோதனை செய்ய, போதைப் பொருள் ஒன்றும் கிடைக்கவில்லை. ஒரு அதிகாரி பாட்டியின் பல்செட்டைக் கழற்றச் சொல்ல உண்மை வெளிப்பட்டது! இருபது தூக்க மாத்திரைகளை பிளாஸ்டிக் உறையில் போட்டு பொய்ப் பற்களின் கீழ் மறைத்து வைத்துப் பேரனுக்கு எடுத்துச் சென்றிருக்கிறார் அந்தப் பலே பாட்டி! இது நடந்தது ஆஸ்லோ நகரில். அந்த நார்வே பாட்டி கைது செய்யப்பட்டார்.

ஆதாரம் : இந்தியன் எக்ஸ்பிரஸ்

தகவல் : ஆர். ஸ்ரீகாந்தன்.

# 'இனிய நிலா'வும் 'காதல் விழி'களும்



தயாரிப்பாளர் விச்வசேனன் அடுத்த வாரம் ரிலீஸாகப் போகும் தம்முடைய 'காதல் விழிகள்' படத்தைப்பற்றி டைரக்டர் இளம்பூர்ணத்திடம் பேசிக் கொண்டிருக்க சரியாக அந்நேரம் பார்த்து 'இனிய நிலா' வார இதழ் நிருபர் மேகநாதன் அங்கு செல்ல -

எதிர்பாராத ஒரு மேட்டர் கிடைத்தது.

விச்வசேனன் ஏகப்பட்ட கோபத்தில் இருந்தார்.

''நீங்க சொன்னபடி ஏன் குஷ்கலா நடிக்கலை?''

''எதுக்கோ தயங்கறாங்க சார். தன்னுடைய முகத்தோற்றத்துக்கு இப்படி பண்ணினா நல்லா இருக்கும்னு அவங்களே மாத்திக்கிறாங்க.''

''இடியட்! அவ யாரு உங்களுக்குச் சொல்லிக் கொடுக்க? ஆப்ட்ரால் நேத்து வந்தவ. அதுக்குள்ள திமிரா? முழுசா மூணு படத்துல நடிச்சிருப்பாளா?''

''இருக்கும் சார்.''

''ஏதோ பார்க்க நல்லா இருக்காளே, முன்னுக்கு வரட்டும்னு சான்ஸ் கொடுத்தா நமக்கே வேடிக்கை காட்டறாளா? நான் நினைச்சா அவளை ஒண்ணுமில்லாம ஆக்கிடுவேன் தெரியுமா?''

''அதெல்லாம் எதுக்கு சார்?''

''என் வீட்டுக்கு சான்ஸ் கேட்டு எத்தனை தடவை வந்தா தெரியுமா? என் பின்னால நாயா அலைஞ்சா. கொஞ்சமாச்சும் இதை நினைக்கப் பார்த்தாளா?''

''சரி விடுங்க சார். நம்முடைய அடுத்த படத்தைப் பத்திப் பேசுவோம்.''

''என்னுடைய அடுத்த படத்துல நிச்சயம் இந்தச் சனியனுக்கு சான்ஸ் கிடையாது. யாரையாவது புதுமுகம்தான் போடப் போறேன்.''

டைரக்டரின் முகத்தில் லேசாய் ஏமாற்றம் படர்ந்தது.

''ஏன் சார்?''

''லட்ச லட்சமா பணத்தைப் போட்டுப் படம் எடுக்கிறவனுக்குத்தான் தெரியும். மூணுமாச ஷெட்யூல்ல முடிய வேண்டிய படம் ஆறு மாசம் டைம் எடுத்துக்க. இதனால யாருக்கு நஷ்டம்?''

''ஆமா சார், அவங்க ஒழுங்கா கால்ஷீட் கொடுத்திருந்தா நாலு மாசத்துல முடிச்சிருக்கலாம்.''

''அது மட்டுமில்லை. ஜனரஞ்ஜகம்னா அவளுக்கு என்னென்னு தெரியுமா?''

''நானும் இதை ரெண்டு மூணு தடவை அவங்களுக்கு ஜாடை மாடையா சொல்லியிருக்கேன் சார். ஆனாலும் அந்த மேடம் தன்னுடைய வழியிலேயே செய்யணும்னு விருப்பப்படறாங்க!''

''என்ன மேடம்! மண்ணாங்கட்டி! முத்தக் காட்சியிலேயாவது அவளுக்கு ஒழுங்கா நடிக்கத் தெரியுதா? நீச்சல் குளக் காட்சியில் கூட தேவையில்லாத வெட்கம்.''

''அவங்க இதுக்கு முன்னால அப்படி நடிச்சதில்லையாம் சார்!''

''பீல்டுக்கு வந்தாச்சுன்னா எல்லாத்தையும் செய்யத் தயாரா இருக்கணும்பா. பத்து ரூபாய் டிக்கெட் வாங்கிட்டு ஒருத்தன் எதுக்குத் தியேட்டருக்கு வரான்? நீ வேணும்னா பார் இனிமே அவளுக்கு எந்தப் படத்திலேயும் சான்ஸ் கிடைக்காது.''

பேட்டி எடுக்க வந்த நிருபர் அப்படியே பின்வாங்கிக் கொண்டார்.

சிறிதும் தாமதமின்றி அந்த வார 'இனிய நிலா' இதழிலேயே மேட்டர் அத்தனையும் வெளிவந்தது.

பரபரப்பான இந்தச் செய்தியை படித்து விட்டு ஏகப்பட்ட வாசகர்களும், சினிமா ரசிகர்களும் வெவ்வேறு விதமாய்க் கடிதம் எழுதினார்கள். போன் செய்தார்கள்.

இதற்கிடையில், இதுகுறித்து நடிகை குஷ்கலா தன் மன வருத்தத்தைத் தெரிவிக்க, நிருபர் மேகநாதன் அவளை பேட்டி காணப் புறப்பட்டார்.

அவள் கொடுத்த கோபமான பேட்டி அடுத்த வார இதழில் இடம் பெற்றது.

''நீங்கள் சான்ஸ் கேட்டு தயாரிப்பாளர் விச்வசேனனிடம் நாய் மாதிரி அலைந்ததாக அவர் கூறுகிறாரே?''

''பொய்! நான் ஒன்றும் அவர் பின்னால் அலையவில்லை. அவர்தான் நிறையத் தடவை எனக்கு போன் செய்தார். வீட்டுக்கும் ஆள் அனுப்பி வைத்தார். நான் வேறொரு படத்திற்கு ஒப்பந்தம் ஆவதைத் தடுத்து நிறுத்த முயற்சி செய்தார். ஆனாலும்

மதுமனோ

அதை மனத்தில் வைத்துக் கொள்ளாமல், அவர் படத்தில் நடிக்க ஒப்புக் கொண்டேன். அவர் ஒரு நன்றிகெட்ட மனிதர் என்பது இப் போதுதான் எனக்குப் புரிகிறது.''

''நீங்கள் ஒழுங்காக கால்ஷீட் கொடுக் காமல் தயாரிப்பாளரை மாதக் கணக்கில் இழுக்கடித்ததாக அவர் குற்றம்சாட்டு கிறாரே!''

''ஒருத்தருக்கு ஒருவரைப் பிடிக்க வில்லையென்றால் கண்ட மாதிரி தாழ்த்திப் பேசுவது, குற்றம்சாட்டுவது இதெல்லாம் உலக இயல்பு.''

''படத்தில் வரும் பல காட்சிகளில் உங்கள் இஷ்டம் போல் நடித்திருப்பதாக வும், தயாரிப்பாளரை நீங்கள் மதிக்க வில்லை என்றும் பேச்சு அடிபடுகிறதே!''

''இதை நான் ஒப்புக் கொள்ள மாட் டேன். எந்த ஒரு நடிகையும் தன் திறமையை வெளிப்படுத்தத்தான் நினைப்பாளே தவிர, முழுக்க முழுக்க டைரக்டர் சொன்னது போலவே தலையாட்டி பொம்மையாய் நடிக்க மாட்டாள். எனக்குக் கிடைத்திருக்கும் இமேஜை கெடுப்பதற்காகவே தயாரிப் பாளர் இப்படிச் சொல்லியிருக்கிறார் என்பது தெள்ளத் தெளிவாகிறது. இது அவ ருடைய கீழ்த்தரமான புத்தியை எடுத்துக் காட்டுகிறது.''

''நீங்கள் நீச்சல் குளக் காட்சியிலும் காதல் காட்சியிலும் கவர்ச்சியாக நடிக்க வில்லை என்று தயாரிப்பாளர் குறைபட்டி ருக்கிறாரே?''

''ஆடைகளை மிகவும் குறைத்து, கவர்ச் சியை வெளிப்படுத்துவதற்கு நான் ஒன்றும் கிளார்ட் டான்ஸ்காரியில்லை. கவர்ச்சி என் பது பார்வையில் இருக்கிறது பேச்சில் இருக் கிறது. என் சிரிப்பில் கூட இருக்கிறது. பணத்தை மட்டுமே குறியாகக் கொண்டு ரசிகர்களை ஏமாற்றும் தயாரிப்பாளர் களுக்கு இதைப் பற்றியெல்லாம் சொன் னால் புரியாது.''

''உங்கள் எதிர்காலத்தைப் பற்றி?''

''நிச்சயம் நான் முன்னேறுவேன். என் திறமை மீது எனக்கு நம்பிக்கையிருக்கிறது. திறமையுள்ள எந்த நடிகையையும் திரை யுலகம் வரவேற்கத் தயங்காது என்பதை இங்கு நினைவூட்ட விரும்புகிறேன்.''

நிருபர் மேகநாதன் நன்றியுடன் விடை பெற்றுக் கொண்டார்.

நடிகை குஷ்கலாவின் பேட்டிக்குப் பிறகு தயாரிப்பாளர் விச்வசேனனின் பேட்டி நடந்தது. அவரது பேட்டியும் கார சாரமாக இருந்தது.

இப்படியாக ஒவ்வொரு வாரமும் பேட்டி தொடர்ந்தது. ஒருவருக்கு ஒருவர் சளைத்தவர் அல்ல என்பது போல் சர்ச்சை வளர்த்துக் கொண்டே போயிற்று.



பத்து வாரங்களுக்கு மேல் பேட்டி நீடித் தது.

குஷ்கலாவின் பிறந்த நாள் வந்தது. பிறந்த நாள் விழா ஒரு பிரம்மாண்டமான ஹோட்டலில் நடந்தது.

விழாவுக்கு ஏகப்பட்ட கூட்டம் வந்தி ருந்தது. சினிமா நட்சத்திரங்களும் ரசிகர்க ளும் நிற்கக் கூட இடம் இல்லாதபடிக்கு நெருக்கியடித்து நின்றிருந்தார்கள்.

'இனிய நிலா' இதழ் நிருபர் மேகநாதன் சமாளித்து உள்ளே நுழைந்தார். குஷ்கலா அழகு மிளிர பிரகாசமாய் நின்றிருந்தாள். அனைவரின் அன்பளிப்பையும், வாழ்த்துக் களையும் சளைக்காமல் புன்சிரிப்புடன் ஏற் றுக் கொண்டிருந்தாள்.

மேகநாதனுடன் சென்றிருந்த போட் டோகிராபர் பளிச்பளிச்சென புகைப்படங் களை எடுத்துத் தள்ளினார்.

மேகநாதன் ஏதாவது சுவையான மேட் டர் கிடைக்குமா என்று சுற்று முற்றும் பார்த் துக் கொண்டிருந்த போது, எதிர்பாராத காட்சி ஒன்று கண்ணில் பட்டது.

தயாரிப்பாளர் விச்வசேனன் சற்று தூரத் தில் யாருடனோ குஷியாய் பேசிக்கொண் டிருந்தார். மேகநாதன் தம்முடைய ஆச்சரி யத்தைப் பக்கத்தில் நின்றிருந்தவரிடம் வெளிப்படுத்த, அவர் சர்வ சாதாரணமாய்ச் சொன்னார்.

''முப்பது வருஷ அனுபவத்துல சொல் றேங்க. அரசியல்ல மட்டுமில்லாம, சினி



மாத் துறையில கூட யாரும் நிரந்தரமான நண்பனும் இல்லை; பகைவனும் இல்லை.''

மேகநாதன் மெதுவாய் அங்கிருந்து நகர்ந்தார். கூட்டத்தைச் சமாளித்து, ஊடுருவி, விச்வசேனனுக்குப் பின்னே நின்று கொண்டார்.

விச்வசேனன் அதைக் கவனிக்காமல் தம் நண்பருடன் சீரியஸாய் பேசிக் கொண்டிருந்தார்.

''விழா ரொம்ப கிராண்டா இருக்கு இல்லை! எதிர்பார்த்த எல்லோருமே வந்துட்டாங்க.''

''ஆனா நீங்க வந்ததுதான் சார் ரொம்ப ஆச்சரியமா இருக்கு. எப்படியெல்லாம் குஷ்கலாவை மட்டம் தட்டி இழிவாப் பேசினீங்க, அதையெல்லாம் மறந்துட்டு...''

''நீங்க சினிமா உலகத்தை இன்னும் சரியா புரிஞ்சுக்கலைன்னு நினைக்கிறேன். நானும், நடிகை குஷ்கலாவும் வேணும் வோ சண்டை போட்டுக்கிட்டோம்? 'காதல் விழிகள்' படம் ரிலீஸ் ஆறதுக்கு முன்னால படம் ரெண்டு வாரம் கூட ஓடாதுன்னு பல பேர் பேசிக்கிட்டாங்க. எங்களுக்கு இது ரொம்பக் கவலையாப் போயிடுச்சு. படத்தை எப்படியாவது நூறு நாளாவது ஓட வைக்கணும்னு நானும், குஷ்கலாவும் ஒருத்தரை ஒருத்தர் தாக்கிப் பேசுறா மாதிரி பாவலா பண்ணோம். நாங்க நினைச்ச மாதிரியே ஏகப்பட்ட பப்ளிசிட்டி உண்டாகி படம் நூறு நாள் ஓடிடுச்சு.''

''பயங்கரமா ஸ்டண்ட் அடிச்சிட்டீங்க சார்.''

''நாங்க ஸ்டண்ட் அடிச்சது ஒரு பக்கம் இருக்கட்டும். ஆனா நாங்க சொன்னதெல்லாம் உண்மைன்னு நம்பி 'இனிய நிலா' இதழ் நிருபர் எங்க பின்னால பைத்தியக்காரன் மாதிரி அலைஞ்சாரே அதை நினைச்சாத்தான் சிரிப்பா வருது.''

மேகநாதன் தயாரிப்பாளர் விச்வசேனனின் தோளைத் தட்ட அவர் திரும்பிப் பார்த்தார். முகத்தில் அசடு வழிந்தது.

''நீங்க...''

''நானேதான். ஆனா நீங்க நினைக்கிறா மாதிரி நாங்க ஒண்ணும் பைத்தியக்காரன் இல்லை. நடிகை குஷ்கலாவும், நீங்களும் ஒருத்தரை மாத்தி ஒருத்தர் சீண்டு முடிச்சிக்கிட்டிருக்கும் போதே உங்க திட்டம் என்னன்னு எங்களுக்குப் புரிஞ்சு போச்சு. ஆனாலும் நீங்க எப்படி உங்க படம் நூறு நாள் ஓடணும்னு எதிர்பார்த்தீங்களோ அதே மாதிரி எங்க சர்க்குலேஷனும் அதிகமாகும்னு எதிர்பார்த்தோம். நாங்க எதிர்பார்த்த மாதிரியே நடந்துச்சு. அதனால நீங்க நினைக்கிறா மாதிரி நாங்க ஒண்ணும் ஏமாந்தவங்க இல்லை.''

தயாரிப்பாளர் அவசரத்தில் எதையோ சொல்லத் தடுமாற, முகத்தில் பளிச்சென கேமரா பிளாஷ் அடித்தது!



● நாடகத்தில் ஒரு காட்சி...

# கீர்த்தனா செய்தது சரியா?

சிறு வயது முதலே, குட்டிக் குட்டி அடக்கப்பட்டு, தாழ்வு மனப்பான்மையுடன் வளரும் அக்னீஸ்வர். இயல்பாகவே பயந்த சுபாவமுடைய கீர்த்தனா... இவ்விருவருக்கும் கண்ணை மூடிக் கொண்டு கல்யாணம் செய்து வைத்து விடுகிறார்கள் குடும்பத்தினர். வாழ்க்கையின் பிரச்னைகளைச் சந்திக்கும் மனோபலம் இருவரிடமுமே இல்லை. அக்னீஸ்வரின் தாழ்வுமனப்பான்மை, மனைவியைக் கொடுமைப்படுத்தும் வக்கிரமாக உருமாறுகிறது. கீர்த்தனாவின் பயம் ஒரு விபரீத பரிமாணம் பெற்று, கொடுமை தாளாமல் கணவனையே மண்ணெண்ணெய் ஊற்றிக் கொளுத்தும் நிலைக்கு அவளைத் தள்ளுகிறது...



✱ விமலா – ராஜகோபாலன்



✱ சுமதி

– பாம்பே சாணக்யாவுடைய 'அக்னி வார்ப்புகள்' நாடகத்தின் கதை – மிகச் சுருக்கமாக – இதுதான்.

கீர்த்தனாவின் செயலை விமர்சித்து விவாதிக்கிறார்கள் மன இயல் நிபுணர் டாக்டர் நம்பி; வழக்கறிஞர் சுமதி; நாடகத்தை ரசித்த விமலா – ராஜகோபாலன் தம்பதி மற்றும் எழுதி இயக்கிய சாணக்கியா.



✱ டாக்டர் நம்பி

ராஜகோபாலன் : அக்னீசுவரிடம் மாட்டிக் கொண்டு அவஸ்தைப்படும் கீர்த்தனாவைப் பார்க்கப் பரிதாபமாக இருக்கு... இஸ்திரிப் பெட்டியால் முகத்தில் சூடு வைக்கிற அளவுக்குச் சித்திரவதை! எந்த ஒரு பெண்ணும் கீர்த்தனா செய்ததைத்தான் செய்திருக்க முடியும்.

விமலா : நாடகம் பார்க்கும் போது எனக்கு அக்னீசுவரை அப்படியே கொன்னுடலாம் போல வந்தது...

டாக்டர் நம்பி : பயந்த சுபாவம் கொண்ட யாராயிருந்தாலும் இந்த மாதிரி நெருக்கடியிலே 'ஹாஸ்டைல்' ஆக - அதாவது வெறுப்பு வெளிப்படற மாதிரி தான் நடந்துக்குவாங்க. வெறுப்பு சில சமயம் தங்களை நோக்கியே இருக்கும் - தற்கொலையில் கொண்டு விடும் - வேற சமயம் எதிராளியை நோக்கியும் பாயும். இங்கே கீர்த்தனாவோட வெறுப்பு அக்னீசுவர் மேலே பாய்ந்து, அவனைக் கொலை செய்ய அவளைத் தூண்டியிருக்கு...

ராஜகோபால் : மண்ணெண்ணெய் கொண்டு வந்த கீர்த்தனா, முதலில் தன் மீதே அதை ஊத்திக்கத்தான் நினைக்கிறா... அப்புறம் மனம் மாறி, தூங்கிக்கிட்டிருக்கிற அக்னீசுவர் மேல ஊத்தித் தீ வைக்கிறாள்.

விமலா : கரப்பான்பூச்சியைக் கண்டால் கூட பயப்படும் ஒரு பெண், கணவனைக் கொல்ற அளவுக்குத் தூண்டப்பட்டிருக்கான்னா, எவ்வளவு தூரம் கொடுமை செய்திருப்பான்னு யோசிக்கணும்... ஒரு பக்கம் அனுதாபப்பட்டாலும் ஒரு பக்கம் ஆச்சரியமா இருக்கு. 'கீர்த்தனாவா இப்படிச் செய்தா?'...னு.

டாக்டர் நம்பி : மனவியல் ரீதியா இது மாதிரி ஒரு நிகழ்ச்சி சாத்தியம்தான்...

சுமதி : மனவியல் ரீதியாகக் கீர்த்தனாவுடைய செயல் சாத்தியமானதாக, சரியானதாகக் கூட இருக்கலாம். ஆனா, தார்மீக ரீதியில் அது தப்புத்தானே! புருஷன் கொடுமை தாளாம, ஒவ்வொரு பெண்ணும் கொலையாளியாக மாறிக்கிட்டே வந்தால் எங்கே போய் முடியும்! இந்தப் பிரச்னைக்கு வேறு தீர்வுகள் இருக்கின்றன என்று யோசித்துச் செயல்படுகிற பக்குவம், ஆற்றல் கீர்த்

✱ சாணக்யா



தனாவுக்கு இல்லைங்கறதுதான் ரொம்ப சோகம்...

**ராஜகோபால் :** ஆனால் கீர்த்தனா அக்னீசுவரைக் கொன்றதும் ஏற்படற ஆடியன்ஸ் ரியாக்ஷன் கவனிச்சீங்களா...? யாருமே அந்த முடிவை ஏற்கத் தயங்கலே.....

**டாக்டர் நம்பி :** அதுக்குக் காரணம் அக்னீசுவர்தான். அந்த அளவுக்குக் கொடுமையாக அவன் சித்திரிக்கப்பட்டிருக்கிறான். அதனால் கீர்த்தனாகிட்டே ஆடியன்ஸுக்கு அனுதாபம் ஏற்படறது. அக்னீசுவர் மாதிரி நிறைய பேரை தினசரி நாங்கள் பார்க்கிறோம். இவர்களுக்கு உள்ள நிலையை, 'சைகோபாதிக் பர்சனாலிடி டிஸ்ஆர்டர்' என்போம் - குணநலக்கேடு - ஆனால் இப்படிப்பட்டவர்களுக்கெல்லாம் இத்தகைய முடிவு - அதாவது அக்னீசுவருக்கு ஏற்பட்டது போன்ற முடிவுதான் சரியானது என்று சொல்வது மோசமான முன்னுதாரணமாக இருக்கும்.

**விமலா :** கீர்த்தனா என்னதான் செய்ய முடியும்? அவன் கொடுக்கும் அடி, உதை, சூடு எல்லாத்தையும் தாங்கிக்கிட்டுப் பொறுமையா இருக்கணும்ங்கறீங்களா?

**டாக்டர் நம்பி :** பொறுத்துக்கிட்டுப் போக வேண்டும்னு நான் சொல்லலை. மருத்துவ ரீதியா அவனுக்கு உதவலாம்; அது பயன்தராவிட்டால் சட்டரீதியாக நடவடிக்கைக்கு முயற்சி எடுக்கலாம்.

**விமலா :** என்ன?... மனநல மருத்துவர்கிட்டே கூட்டிட்டுப் போகணும்ங்கறீங்களா? அக்னீசுவர்தான் பிரச்னை பூரா கீர்த்தனாகிட்டேதான் இருக்குன்ற மாதிரி நடிக்க எல்லாரையும் நம்ப வைக்கறானே! அப்படியே கீர்த்தனா ரொம்ப முயற்சி செய்து சட்டபூர்வமா டைவோர்ஸ் வாங்கிடறானே வைச்சுக்குவோம்... அக்னீசுவர் வேறொரு பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கிட்டு அவளைக் கொடுமைப் படுத்தமாட்டான்னு என்ன நிச்சயம்...? இப்படியே பல பெண்கள் வாழ்க்கை வீணாறதை விட அவன் ஒருத்தன் ஒழியறது மேல்.

**சுமதி :** அக்னீசுவர் கீர்த்தனாவைக் கொடுமைப்படுத்தற ஆரம்ப கட்டத்தை நினைவுபடுத்திப் பாருங்க.. அது வெறும் பொருளாதாரப் பிரச்னை! 'கிடைச்ச வேலையை விட்டுட்டு வந்திட்டீங்களே! கடன் பாக்கியெல்லாம் இருக்கே...' என்று கீர்த்தனா புலம்பும் போதுதான் அவன் வெறுப்பும் கோபமுமா வெடிக்கிறான்... மாறாக, கீர்த்தனா, "வேலை என்னங்க பிரமாதம்! நான் இருக்கேன் உங்களுக்கு. என்னாலயும் நாலு காசு சம்பாதிக்க முடியும். எப்பேர்ப்பட்ட சூழ்நிலையிலயும் சமாளிச்சுக்கலாம்"ன்னு தைரியம் சொல்லியிருந்தால் நடந்திருக்கக் கூடியதே வேறே...

**ராஜகோபால் :** அப்படிப் பேசியிருந்தா அக்னீசுவர் திருந்தியிருப்பான்னு நினைக்கறீங்களா?

**விமலா :** நோ! நோ! அவன் மாத்தக் கூடிய நிலையிலேயே இல்லை! அவன் மனநோயாளி... அவனை நார்மலாக்க முடியுமா...?

**டாக்டர் நம்பி :** ரொம்ப கஷ்டப்பட்டு முயற்சி பண்ணினால் ஒரு கட்டுப்பாட்டுக்குக் கொண்டு வரலாம் - அதுவும் மனநல டாக்டர் உதவியோட... ஆனால் அது எத்தனை நாள் நீடிக்கும்னு சொல்றதுக்கில்லை... அக்னீசுவர் ஒரு மனநோயாளியா ஆனதுக்கு அவனைச் சுற்றியிருந்தவங்கதான் பொறுப்பு... குறிப்பாக அப்பா - எப்படியெல்லாம் ஒரு குழந்தையை வளர்க்கக் கூடாதோ அப்படியெல்லாம் அவனை வளர்க்கிறார்.

**சுமதி :** அதே போல்தான் கீர்த்தனாவும் - சின்ன வயதிலேயே சரியாகத் திசை திருப்பியிருந்தால் தன்னம்பிக்கையோட வளர்ந்திருப்பாள்.

**டாக்டர் நம்பி :** எப்படி எப்படி ஒரு கல்யாணத்தை நிச்சயிக்கக் கூடாது என்கிறதுக்கும் இந்தக் கதை ஒரு உதாரணம். அக்னீசுவருடைய தம்பியும் கீர்த்தனாவுடைய தங்கையும் காதலர்கள். அவங்க கல்யாணத்துக்கு முன்னாடி மூத்தவங்களுக்கு முடிக்கணுமென்ற அவசரத்துல பெரியவங்க அக்னீசுவர் - கீர்த்தனா கல்யாணத்தைச் சேர்த்து நிச்சயம் பண்ணிடறாங்க...

**ராஜகோபால் :** ஆமாமாம். ஆரம்பத்திலேருந்தே அக்னீசுவர் - கீர்த்தனாவுக்குத் துளியும் மனப்பொருத்தம் கிடையாது.

**சுமதி :** ஆக, கீர்த்தனா ஒரு கொலையாளியாக மாறியதற்குக் காரணம் யார்...? அவளைச் சரியாக தைரியமூட்டி வளர்க்காத அவள் அப்பாவா? அக்னீசுவரை அலட்சியப்படுத்தி அவனுக்கு மனநலக்கேடு உண்டாக்குமளவுக்கு நடந்து கொண்ட அவன் தந்தையா? அவர்கள் இல்வாழ்க்கையில் 'சம்திங் ராங்' என்று தெரிந்தும் தீர விசாரிக்காமல் விட்ட சித்தப்பாவா? ஒரு வக்கீலாக - பப்ளிக் பிராஸிக்யூடராக இருந்தும் தன் அக்காவின் வாழ்க்கையில் ஏற்பட்ட சிக்கலை உணர்ந்து தீர்த்து வைக்காத தங்கையா...? இவ்வளவு தவறுகளும் சேர்ந்துதான் பெரிய பிரச்னையை உண்டாக்கியுள்ளன...

**டாக்டர் நம்பி :** சுமதி சொல்வது சரி. இத்தனை குற்றவாளிகளையும் மறந்துவிட்டு அக்னீசுவர் - கீர்த்தனா நிலைமையை நாம் எடை போட முடியாது...

**சுமதி :** அதனால்தான் சொல்கிறேன், அக்னீசுவர் - கீர்த்தனா இடையேயான பிரச்

னையை ஒரு பெண்ணுக்கு ஆண் இழைக்கும் கொடுமையாக மட்டுமே தனிப்படுத்திப் பார்க்கக் கூடாது... அதில் வேறு பலருக்கும் பொறுப்பு இருக்கிறது...

**டாக்டர் நம்பி :** நாடகத்தின் முடிவில் கீர்த்தனாவின் செயலை நியாயப்படுத்துவது நல்லதில்லை...

**சாணக்யா :** லண்டனில் நடந்த கிரண்ஜித் அலுவாலியா வழக்கின் அடிப்படையில்தான் இந்த நாடகக் கதையை அமைத்தேன். அப் பெண் இதே போல் தான், தன்னை மிகவும் கொடுமைப்படுத்திய கணவனைக் கொன்று விட்டாள். ஆனால் பெண்கள் அமைப்புகளின் ஆதரவினால் கிரண்ஜித் அலுவாலியா வழக்கில் அவர் குற்றவாளியல்ல என்ற புரட்சிகரமான தீர்ப்பு வழங்கப்பட்டது...

**கல்கி :** கிரண்ஜித் அலுவாலியா இந்தியப் பெண் என்பது குறிப்பிடத்தக்கது அல்லவா...?

**கமழி :** இந்தியப் பெண்கள் அடங்கி ஒடுங்கி அவதிப்படக்கூடாது என்று சொல்ல வருகிறீர்கள். நல்லது! ஆனால் 'நல்லதங்காள் மனப்பான்மை'யை வீழ்த்த வேண்டுமேயொழிய, அக்னீகவர்கள் இருக்கும் வரை கீர்த்தனாக்களும் இருப்பார்கள் என்று பொதுப்படையாகச் சொல்வது எவ்வாறு சரியாகும்...?

**ராஜகோபால் :** கதவுகள் மூடப்பட்ட ஓர் அறையில், தனி மனிதன் ஒருவன் ஒரு பூனையுடன் வாழ முடியாது என்று சொல்வார்கள். பூனை, பயத்திலேயே அம் மனிதனைக் குதறி விடுமாம்! அது போன்றது தானே கீர்த்தனாவின் நிலைமையும்....

**டாக்டர் நம்பி :** தனிப்பட்ட முறையில் கீர்த்தனா பரிதாபத்துக்கு உரியவள்தான். அதனால்தானே அவளே கணவன் இறந்த பிறகு தனக்கு இனி எதிர்காலம் இல்லை என்று தற்கொலைக்கு முயற்சி செய்கிறாள்.... அந்தச் சமயத்தில் அவள் சித்தப்பா அவளைத் தடுத்து நிறுத்துகிறார். எந்தப் பிரச்னைக்கும் தற்கொலை தீர்வாகாது என்று எடுத்துச் சொல்கிறார்... இது பாஸிடிவ்வான விஷயம்.... ஆனால் நாடகம் முடியும் போது கீர்த்தனாவின் கொலைச் செயலை ஆதரிக்கும் தொனியில், அக்னீகவர்களை அச்சுறுத்தும் தொனியில் முடிகிறது... இதைத்தான் ஏற்க முடியவில்லை.

**ராஜகோபால் :** கீர்த்தனா குற்றவாளியல்ல என்பதற்குச் சட்டரீதியான முன்னுதாரணம் கிரண்ஜித் அலுவாலியா வழக்கு... அப்படியிருக்கையில் சாணக்யா கதையை சரியாகத்தான் முடித்திருக்கிறார் என்பேன்.

**கமழி :** மேலைநாட்டு வழக்கை நம் நாட்டுச் செயல்பாடுகளுக்கு முன்னுதாரணம் காட்டக் கூடாது. சட்டரீதியாகக் கீர்த்தனா செய்தது கொலைக் குற்றமே. ஆனால் அவள் மன்னிக்கப்பட வேண்டியவளா? என்று கேட்டால், இல்லை என்பேன். சில தவறுகள் தண்டிக்கப்பட வேண்டியவை; சில கண்டிக்கப்பட வேண்டியவை. கீர்த்தனா கண்டிக்கப்பட வேண்டியவள்...



"இந்த நாட்டுல ஃப்ரீயா பேசக் கூட முடியலை..."
"என்ன ஆச்சு?..."
"மூணு நிமிஷம் பேசினதுக்கு ஒரு ரூபாய் வாங்கிட்டாங்க."
- ராதா வாசுதேவன்.

**கல்கி :** இப்படி ஒரு கொலை செய்தவளுக்கு என்ன எதிர்காலம் இருக்க முடியும்? ஆயுளுக்கும் குற்ற உணர்வு வருத்தாதா?

**டாக்டர் நம்பி :** இல்லை! கால ஓட்டம் அவர்களுடைய குற்ற உணர்வை ஆற்றி விடும். ஆக்கபூர்வமான நடவடிக்கைகளில் அவர்கள் ஈடுபட்டு சமூகத்துக்கு உபயோகமானவர்களாக உருவாகலாம்.

**கமழி :** எப்படியிருந்தாலும் அக்னி வார்ப்புகள் முடிவில் கீர்த்தனாவின் செயலை நியாயப்படுத்துவதற்குப் பதிலாக அந்த நிலைமை உருவாகக் காரணமாய் அமைந்த பல விஷயங்களையும் சுட்டிக் காட்டித் தட்டிக் கேட்டிருக்க வேண்டும்.

**சாணக்யா :** அப்படிச் செய்திருந்தால் நாடகத்தின் தாக்கம் குறைந்து போயிருக்கும். கலை வடிவம் சிதைந்து போயிருக்கும்.

**கல்கி :** அதுதான் கலைஞனுக்கு இருக்கும் மிகப் பெரிய சவால். சமுதாயப் பொறுப்புடன் கலை வடிவத்தைப் பொருத்துவது...

**ராஜகோபால் :** எது எப்படியிருந்தாலும், அக்னிவார்ப்புகள் நாடகம் நம் எல்லோரையுமே இவ்வளவு தூரம் யோசிக்க வைத்திருக்கிறது இல்லையா...?

**விமலா :** ஆமாம்! இன்றைக்கு வருகிற எத்தனை நாடகங்களால் அதைச் செய்ய முடிகிறது!

தொகுப்பு : சித்தார்த்
படங்கள் : கோபிநாத்



பருவமழை பொய்த்ததனால்
பால்கார அண்ணாச்சி
திருதிருனு முழிச்சாரு!
தீர்த்தமெங்க கலப்பாரு?

ஆடிமுதல் சாமியார்கள்
ஆரம்பிச்ச யாகத்திலே
கூடிவந்த மேகமெல்லாம்
குளிர்காய்ஞ்சி கலைஞ்சிடுச்சோ?

வானிலை அறிக்கைகதை
வழக்கமாத் தெரியுமுங்க
'இடியுடன் மழை' என்றால்
குடைதேவை இல்லீங்க!

மழைக்காலம் வந்ததுன்னு
'மான்மார்க்கு' வாங்கி வச்சோம்!
மழைஎங்க வந்ததுங்க?
துணிகிழிச்சி சட்டை தச்சோம்!

# மழை வேட்டை

செய்ஞ்சிப்புட்ட வித்தைக்கெலாம்
இயற்கை மசியலீங்க!
இறங்கிக் கசியலீங்க!

ஊழல் பூமியிலே
உருண்டுசெல்லப் புடிக்காம
பாழும் சமுத்திரத்தில்
படுத்துக் கிடக்குதுங்க!

வயலின் குன்னக்குடி
வாசித்த வாசிப்புல
புயலை எதிர்பார்த்தோம்
புழுலேரி நனையலீங்க!

வருணனுக்குக் கட்அவுட்டு
வைத்தால்ததான் மழையென்று
அரசியலில் ஒருபேச்சு
அடிபடுதே அடராமா!...

அவரவரின் ஆணைக்கு
அடைமழையும் பெய்யாது
மவராசி இயற்கைத்தாய்
மனம்வைத்தால் குறையேது?

- நா. வே. அருள்



# சக்கரவர்த்தித் திருமகன்

**வ**ருஷத்துக்கு ஒரு முறையாவது காமோகார்ஷீத்', 'மன்யுரகார்ஷீத்' - சந்தியைப் பிரித்தால் - காம: அகார்ஷீத், மன்யு: அகார்ஷீத் - அதாவது 'ஆசை என்னை ஏமாற்றி பாபம் செய்யச் செய்தது; கோபம் என்னை ஏமாற்றி பாபம் செய்யச் செய்தது' என்று வருந்தி அடக்கத்துடன் பல தடவை சொல்லி உள்ளத்தைச் சுத்தப்படுத்திக் கொள்வது வைதிகர்களின் ஜப முறை. இதை யாவருமே அனுசரித்தல் வேண்டும். ஜபம் செய்து உள்ளத்தை ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்துவிட வேண்டும். காமோகார்ஷீத், மன்யுரகார்ஷீத் நாராயணாயநம:

**பி**ரலாபித்துக் கொண்டிருந்த தாரையிடம் ராமன் மெள்ளச் சென்றான். பயந்தே சென்றான்.

தாரையானவள் தன் முகத்தில் கோபக் குறிகள் ஏதும் காட்டாமல், ''வீரனே, எந்த பாணத்தால் என் புருஷனைக் கொன்றாயோ அதே பாணத்தைக் கொண்டு என்னையும் கொன்று என் பர்த்தாவை நான் சேரும்படி செய்வாயாக. என்னை விட்டு அவர் சுவர்க்கத்திலும் சந்தோஷப்படமாட்டார். பெண்ணைக் கொன்ற பாபம் உனக்கு உண்டாகும் என்று பயப்படாதே! புருஷனையும் மனைவியையும் ஒன்று சேர்த்த புண்ணியமே உனதாகும். என் புருஷனை அதர்ம முறையில் கொன்றதற்கு இதுவே உனக்குப் பிராயச்சித்தமாகும். வாலி இறந்த பிறகு நான் பிழைத்திருக்க முடியாது!'' என்று மகா வீரனுடைய பட்டமகிஷிக்கு உரித்தான மொழிகளைப் பேசிப் புலம்பினாள்.

**இ**வ்விடத்தில் தாரை ராமனுடைய அவதார உண்மையை அறிந்து ராமனை மகா விஷ்ணுவாகவே கண்டாள் என்று வால்மீகி ராமாயணத்தில் சொல்லப்படுகிறது.

லக்ஷ்மணன் தாயாகிய சுமித்திரையைப் பற்றி வழங்கி வருவதுபோல், வாலியின் மனைவி தாரையும் மகா அறிவாளி, ஞானி என்பது பரம்பரையாக வந்த அபிப்பிராயம். ஆனபடியால் அவள் தன் புருஷனை அதர்ம முறையில் கொன்றவன் மேல் கோபமும் வெறுப்பும் முதலில் கொண்டிருந்தாலும் நேரில் தரிசனம் அடைந்ததும் ராமனுடைய உண்மைச் சொரூபத்தைக் கண்டாள் என்று சொல்லப்படுகிறது.

வெறுங் கதையாகப் படித்தால் இது ரஸமாகத் தோன்றாது. பக்தி மார்க்கத்தில் ஈடுபட்டவர்களுக்கு இது அசம்பாவிதமாகத் தோன்றாது. துளசிதாஸருடைய ராமாயணத்தில் இந்தச் சந்தர்ப்பத்தில் பரமசிவன் பார்வதிக்குச் சொல்வதாகப் பாடுகிறார் :

''உமையே, பார்த்தாயா? சுவாமியாகிய ராமன் எல்லாரையும் எப்படி பொம்மையாட்டம் ஆடச் செய்கிறான் என்று.''

பக்திக் கண்களால் பார்த்தால்தான் பழைய புராணங்களின் சாரம் நன்றாகக் காண முடியும்.

சாதாரணமாக விமர்சனம் செய்தாலும் தாரை மிக சாமர்த்தியசாலி, ராஜநீதியில் தேர்ச்சி பெற்றவள். முன்னால் நடக்கப் போவதை ஊகித்து அறியும் சக்தி அவளுக்கிருந்ததை வாலியே சொல்லியிருக்கிறான். நடந்தது நடந்து விட்டது: சுக்ரீவன் தன்னுடைய சாமர்த்தியத்தாலும், தெய்வச் செயலாலும் ராமனுடைய துணையைச் சம்பாதித்து விட்டான். வாலி இறந்து விட்டான். இனி அங்கதனுடைய க்ஷேமத்தைத் தானே சுக்ரீவனோடு விரோதம் செய்து கொண்டு சண்டை பிடிக்க முடியுமா? சுக்ரீவனுக்கு வில்லேந்திய ராம லக்ஷ்மணர்கள் சகாயமாக ஏற்பட்டு விட்டார்கள் ஆனபடியால் நீதி சாஸ்திரப்படி இந்த சமயத்தில் சாமோபாயமே மேல் என்பதை தாரை கண்டாள். ஆனபடியினால் ராமனிடம் பொறுமையுடன் நடந்து கொண்டாள். அங்கதன் வாழ்க்கை பாழாகப்

ராஜாஜி

● வேலை வேண்டும்
என்றான்.
வாங்கிக் கொடுத்தேன்.
மறுபடி வந்தான்.
வேலை இல்லாத வேலை
வேண்டும் என்றான்!
- எம். சிதம்பரம்.

போகாமற்படி காக்கும் வழியைத் தேடினாள்.

வாலிக்கு உத்தரகிரியை விமரிசையாக நடத்தப்பட்டு முடிந்தது. மங்கள ஸ்நானம் செய்வித்து, சுக்ரீவனுக்கும் அங்கதனுக்கும் முறையே ராஜ்யாபிஷேகமும் யுவராஜ்ய பட்டாபிஷேகமும் செய்யப்பட்டன.

மழைக்காலம் ஆரம்பித்தது. சுக்ரீவன் முதலியவர்கள் கிஷ்கிந்தாபுரத்தில் சுகமாகக் காலங் கழித்தார்கள். ராம லக்ஷ்மணர்கள் பக்கத்திலிருந்த ஒரு மலைக் குகையில் காலங் கழித்தார்கள். மழையால் வெள்ளப் பெருக்கெடுத்து, காட்டுப் பாதைகள் எல்லாம் நீரோட்டமாக ஓடி, போக்குவரத்துத் தடைபட்டுக் கிடந்தது. சீதையைத் தேடும் காரியம் அதனால் தடைபட்டது. சீதையின் நிலையை எண்ணி எண்ணி ராமன் மிகவும் துக்கப்பட்டான். மாரிக் காலம் முடிவாகும் வரையில் பொறுமையோடு இருக்க வேண்டும் என்று லக்ஷ்மணன் ராமனுக்குச் சொல்லிச் சமாதானப் படுத்தி வந்தான். ராமனும் அப்படியே பொறுத்திருந்தான்.

எத்தனை பெரிய துக்கம் நேர்ந்தாலும் காலக்கிரமத்தில் உள்ளத்தில் நாம் பெற்றிருக்கும் மறதி என்ற சக்தியினால், துக்கம் வர வர மறைந்து போய், வாழ்க்கையில் கவனம் செலுத்தி அமைதி அடைகிறோம். ஈசுவரன் அமைத்திருக்கும் இந்த மறதி என்னும் சக்தி நமக்கு மிகப் பெருஞ் செல்வமாகும். அது இல்லையேல் இந்த உலகம் துயரத்துக்கு மேல் துயரமாகக் குவிந்து நரகமேயாகிவிடும். இந்த நியதியின்படி சுக்ரீவனும் அவன் பந்துக்களும் தாரையும் உள்பட எல்லாரும் வாலியை இழந்த துக்கத்தை மறந்து சீரும் சிறப்பும் நிறைந்த கிஷ்கிந்தையில் சந்தோஷமாக இருந்தார்கள்.

ஹநுமான் மட்டும் கவலைப் பட்டான். அவன் ராமனுடைய காரியத்தை மறக்கவில்லை. பிரதிக்ஞை செய்து கொடுத்ததைப் பற்றி அரசனிடம் மெதுவாகப் பேசுவதற்குத் தருந்த சமயம் பார்த்துக் கொண்டிருந்தான்.

## 60. கோபம் தணிந்தது

மழைக் காலம் முடிந்தது. ஆகாயம் மேகமும் மின்னலும் இல்லாமல் வெளுத்து விட்டது. பறவைகளும் பறந்து விளையாட ஆரம்பித்து விட்டன. மகா புத்திசாலியும் தர்மத்தினின்று என்றும் பிறழாத உள்ளத்தைப் பெற்றவனுமான ஹநுமான் தன் அரசனிடம் சென்றான்.

ராஜ காரியங்களையெல்லாம் மந்திரிகளிடத்தில் ஒப்புவித்து விட்டு, அந்தப்புர போகத்தில் மூழ்கிக் கிடந்த சுக்ரீவனிடம் சென்று வினயமாகப் பேசலானான். எத்தனை அறிவாளிகளும் நல்லவர்களுமானாலும் சுகபோகத்தில் மூழ்கி விட்டால் கடமைகளை மறந்து விடுவது இயற்கை என்பது ஹநுமானுக்குத் தெரிந்த விஷயம்.

"முன்னோர்கள் அனுபவித்த ராஜ்யத்தை அடைந்து விட்டீர். புகழும் பெற்று விட்டீர். உம்முடைய அதிகாரம் ஸ்திரமாகி விட்டது. ஆனால் மித்திரர்களுக்குச் செய்ய வேண்டியதைச் செய்து அவர்களுடைய சிநேகத்தைப் பலப் படுத்திக் கொள்ள வேண்டியது எஞ்சி நிற்கிறது. அதைச் செய்தால் அல்லவோ உம்முடைய புகழ் இன்னும் பெருகும். ராஜ்யமும் பலப்படும். தன் காரியங்களையும் சுகங்களையும் புறக்கணித்துங் கூடத் தன்னுடைய நண்பர்களின் காரியத்தை வாக்களித்தபடி செய்ய வேண்டும். அப்படிச் செய்து தீர்த்தால் அரசனுடைய பலமும் கீர்த்தியும் விருத்தியடையும். பிரதிக்ஞை செய்து கொடுத்த வாக்குறுதிப்படி, சொன்ன காலத்துக்கு முன்னாலேயே அதைச் செய்து தருவது விசேஷம். காலதாமதம் கூடாது. செய்ய வேண்டியதைக் காலதாமதம் செய்து விட்டு, பின்னால் செய்தாலுங்கூட அது பயன் தராது. மித்திரர்களுக்குச் செய்ய வேண்டியதை அவர்கள் அதைப் பற்றி ஞாபகப்படுத்துவதற்கு முன்பே செய்வது புத்திசாலித்தனம். தாமதப்பட்டுச் செய்வதில் குணக் குறைவு. இது உமக்குத் தெரிந்த விஷயமே. ராமன் நமக்குச் செய்த உதவியை நாம் நினைவில் வைத்து, அவனுக்காக நாம் செய்ய வேண்டியதை அவன் நமக்கு நினைவூட்டுவதற்கு முன்னதாகவே நாம்

ஆரம்பிக்க வேண்டும். மாரிக் காலம் முடிந்து விட்டது. இனி தாமதிக்கக் காரணமில்லை. சீதையைத் தேட வேண்டிய பெருங் காரியத்தை இனி ஒத்தி வைப்பது தகாது. ராமன் அதைப் பற்றி மிகப் பொறுமையாகவே இருந்து வருகிறான். ஆனாலும் இனி கொஞ்ச மேனும் தாமதிக்கலாகாது. ராமன் உம்முடைய சத்துருவைக் கொன்றதை யோசித்துப் பார்க்க வேண்டும். அதிலுள்ள பெரிய அபாயத்தையும் பழியையும் கருதாமல் எவ்வளவு துரிதமாகச் சொன்னபடியே செய்து விட்டான். நாமும் அவ்வாறே வாக்குறுதியைச் சீக்கிரமாக நிறைவேற்ற வேண்டும். கால தாமதம் செய்வது கூடாது.''

இவ்வாறு மிக வினயமாக நீதி முறையை எடுத்துக் காட்டி மாருதி சுக்ரீவனுக்கு யோசனை சொன்னான். சுக்ரீவனும் அது சரி என்று ஒப்புக் கொண்டு, சரியான காலத்தில் யோசனைகள் சொன்னதற்காக ஹநுமானுக்கு நன்றி செலுத்தி வானர சேனையைத் திரட்டச் சொல்லி நீலனுக்கு உத்தரவிட்டான்.

''பூமி முழுதும் சுற்றித் தேடிப் பார்த்து சீதையைக் கண்டுபிடிக்க வேண்டும். திறமைவாய்ந்த வானரர்களை உடனே வந்து சேரக் கண்டிப்பாக உத்தரவிடுவாய். வந்து சேராதவர்களுக்கு மறு விசாரணையின்றித் தண்டனை விதிக்கப்படும்'' என்று சொல்லி விட்டு சுக்ரீவன் தன் அந்தப்புரத்துக்குள் சென்றான்.

ராமனும் லக்ஷ்மணனும் தங்களுடைய குகையில் காலம் கழித்து வந்தார்கள். எப்போது மாரிக் காலம் முடிந்து வானர ராஜன் தன்னுடைய பணியைச் செய்வான் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

மழையெல்லாம் முடிந்து வனமும் வனத்தில் வசிக்கும் பிராணிகளும் மிகுந்த அழகுடன் பிரகாசித்து வருவதை ராமன் பார்த்து, அரக்கன் கையில் அகப்பட்டுத் தவிக்கும் சீதையைப் பற்றி எண்ணியெண்ணித் துயரத்தில் மூழ்கினான்.

''உலகமெல்லாம் சௌந்தரியமும் மகிழ்ச்சியுமாக இருக்கிறது. சீதை எங்கேயோ தவித்துக் கொண்டிருக்கிறாள். நானோ இங்கே நன்றி மறந்த வானர ராஜனுடைய தயவை எதிர்பார்த்துக் கொண்டு சும்மா கிடக்கிறேன். ஆஹா! நான் சென்ற தண்டகாரண்யத்தை ஒரு உத்யான வனமாகக் கருதி என்னுடன் முள் மேலும் கல் மேலும் துள்ளிக் குதித்து சந்தோஷமாக நடந்து வந்தாளே. அவள் இந்தச் சமயத்தில் என்ன கஷ்டப்படுகிறாளோ! இந்த வானர ராஜனோ மதுபானத்தில் மூழ்கி, பெண்களோடு கூடி கிராம்மிய சுகத்தில் ஈடுபட்டு எனக்குத் தந்த வாக்கை முற்றிலும் மறந்து விட்டான். இந்த வானர ராஜன் ஒரு கயவனாகத் தெரிகிறது. லக்ஷ்மணா! நீ உடனே கிஷ்கிந்தைக்குப் போய் வானர ராஜனைக் கண்டு சொல் : 'உன் அண்ணனை அனுப்பிய யமாலயத்தின் வாயில் திறந்து உனக்காகவும் காத்திருக்கிறது. தெரிந்து கொள். வாலி சென்ற வழி நீயும் போக விரும்பு கிறாயா?' என்று நான் கேட்டதாக அவனுக்குப் பளிச்சென்று சொல்லி புத்தி புகட்டுவாய்.

''செய்த உபகாரத்தை மறந்தவன் அழிந்து போவான். மித்திரனை ஏமாற்றப் பார்ப்பவன் கதி அதோகதியாகும். ராமனுடைய வில்லும் அம்பும் தயாராக இருக்கின்றன' என்று அவனுக்குச் சொல்.

''மாரி மாதங்கள் நான்கும் முடிந்து விட்டன. நான்கு மாதங்களும் ராமனுக்கு நான்கு யுகங்களாகக் கழிந்தன. நீயும் உனக்கு அடங்கியவர்களுமோ சந்தோஷமாக போகங்களை அனுபவித்து வருகிறீர்கள். ராமனுடைய கோபத்தை வளர்த்து வருகிறீர்கள். நாசமடைவதற்கு வழி தேடுகிறீர்கள்' என்று சொல்வாய்.''

இப்படி ராமன் தன் கோபத்தையும் ஆத்திரத்தையும் சுக்ரீவனுக்குத் தெரியப்படுத்தச் சொல்லி, தம்பி லக்ஷ்மணனை அனுப்பினான்.

(தொடரும்)

---

''அந்த அதிகாரியோட 'காரை' வாங்கினது தப்பாப் போச்சு!''

''ஏன் என்ன ஆச்சு?''

''அதுவும் நிறையத் தள்ளினால்தான் நகருது!''

- ராமகிருஷ்ணன்.



# தத்வமஸி

**வ**சுமதிக்குத் தூக்கம் வரவில்லை. கணவன் வருவதற்கு இன்னும் இரண்டு மணி நேரம் ஆகும். கணவனுக்குக் கதவு திறந்து விட வேண்டும். அதற்குள் கொஞ்சம் தூங்கலாம் என்றால் தூக்கம் வர மாட்டேன் என்கிறது.

புரண்டு புரண்டு படுக்க இம்சையாக இருந்தது. நிம்மதியாகத் தூங்க நல்ல மனம் வேண்டும். பிரச்னை இல்லா வாழ்க்கை வேண்டும். ஆ... என்றால் அழும் அம்மாவும், கண் துடைக்கும் கணவனும், கட்டிக் கொள்ளும் குழந்தையும் வேண்டும். வலி இருந்தாலும் வாழ்க்கை சுகமாய்ப் போகும்.

வசுமதிக்குக் கணவனே பிரச்னையானது தான் இங்கு பிரச்னை. 'ஆ' என்று அலறுவதே கணவனால்தான். கண் துடைக்க யாருமில்லாமல் போக வசுமதிக்கு வலி வந்தது. அதுவே வாழ்க்கை ஆனது. கண் துடைக்க யாராவது வேண்டும். யாரும் இல்லை என்றால் கண் துடைத்துக் கொள்ளத் தெரிய வேண்டும். இரண்டுமில்லா வசுமதிக்குத் தூக்கம் வர மாட்டேன் என்கிறது.

வசுமதிக்கு தன் முடிவு பற்றிய சிந்தனை வந்தது. தன் முடிவு, சரியா, தவறா என்று கேள்வி வரவில்லை. பிடிக்காத கணவனிடமிருந்து பிரிந்து வாழ்வது சரியெனப்பட்டது. சாயங்காலம் வக்கீலிடம் போய் விட்டு வந்தது பற்றி சந்தோஷம் வந்தது.

**வெ**ளியில் சப்தம் கேட்க, கணவன் வந்து விட்டது புரிந்தது. கதவு திறந்து விட்டு வந்து மீண்டும் படுத்துக் கொண்டாள். கதவு திறந்து விடுவது மட்டும் அவள் வேலை.

தினமும் இவ்வாறே நடக்கிறது. பேசுவது கூட 'ஆம்...' 'இல்லை...' போன்று தான். பத்து மணிக்கு மேல் வந்து புருஷன் தானே உண்பதும், தட்டு கழுவிக் கொள்வதும், தனியறையில் படுத்துக் கொள்வதும் தினசரி நிகழ்கின்றது.

வசுமதியின் கணவன் சங்கரனுக்கு மளிகைக் கடை வியாபாரம். நடு டவுனில் கடை. வேலைக்கு நான்கைந்து ஆட்கள். வியாபாரமும் பிய்த்துக் கொண்டு போனது. இரவு ஒன்பது மணி வரை வியாபாரம் குறையாது நடக்கும். கடையை விட்டு வெளியே வர முடியாது. மனமும் வராது.

அரைமணி நேரம் முன்னதாகப் பூட்டினால் ஐம்பது ரூபாய் குறையுமே என்ற எண்ணம் சங்கரனுக்கு. வேலையில் ஒன்றிப் போக, சூழ்நிலை மறந்து போகும்.

ஒன்பது மணிக்கு அனைவரையும் அனுப்பி விட்டு, பணத்தை எண்ண ஆரம்பிக்கும் போது, தூக்கமும் சோர்வும் தலையை ஆட்டும். கடை பூட்டி, அருகிலுள்ள கடையில் 'பாட்டில்' முடித்து, வண்டியில் வீடு திரும்பும் போது, 'ஜாலியாய்' இருக்கும்.



காலையில் எட்டு மணியிலிருந்து இரவு ஒன்பது மணி வரை வேலை செய்த சலிப்பு, பாட்டில் வாங்கியவுடன் பறந்து விடும். இது சுகமாய்ப் போக, தினசரிப் பழக்கம் தானாய் வந்தது.

'**ட**வுனில் மளிகைக் கடை. மாசம் பத்தாயிரத்திற்கு மேல் வருமானம், பையன் பி.எஸ்ஸி' என்று சொன்ன போது கல்யாணத்திற்கு சந்தோஷமாய் ஒப்புக் கொண்டவள் வசுமதி.

மளிகைக் கடை வியர்வையில் நனைந்தும், பாட்டில் சுவாசத்துடனும் வரும் கணவனைக் கண்டு, வசுமதிக்கு இரண்டு வரு

டத்தில் முகச் சுளிப்பு வந்து விட்டது.

பணமே சகலத்திற்கும் காரணம். பணம் வர சகலமும் வரும்; கோழைக்கும் வீரம் வரும். தான் சம்பாதிக்கிறேன் என்ற எண்ணம் வரும் போது, தன்னால் எதுவும் செய்ய முடியும் என்ற நம்பிக்கை வரும். முடிவுகளைப் பற்றியோ, தான் செய்யும் காரியம் பற்றியோ சிந்தனை வராது. தான் எடுத்த முடிவு சரியா? தவறா என்ற எண்ணமும் வராது.

இரண்டாயிரத்து ஐநூறு ரூபாய் சம்பளம், வசுமதிக்குத் தன் மேல் நம்பிக்கை காட்டியது. தனக்குள்ளே தன் மதிப்பை உயர்த்தச் செய்தது. பணம் வருவது தனக்கும் திறமையிருக்கிறது என்பதைக் காட்டுவதுதானே என்ற எண்ணத்தைக் கொடுத்தது.

கரத்துப் பெறுவது என்பது உறுதியானது.

அந்த உறுதி வக்கீல் ராஜகோபாலைத் தேடிப் போகச் சொன்னது. 'இரண்டு நாள் கழித்து வாங்க!' என்று டைம் சொன்னது வசுமதியைத் தூங்காமல் செய்தது.

**மீ**ண்டும் வக்கீலைத் தேடி சென்ற போது, தடிதடியான புத்தகங்கள் மேஜையில் அடுக்கி வைக்கப்பட்டிருக்க, பின்னால் வக்கீல் தெரிந்தார்.

வயது நாற்பது, நாற்பத்தைந்து இருக்குமோ? ''உட்காரம்மா...'' என்று சொல்லி விட்டு, ''உங்களுக்கும் உங்க கணவருக்கும் என்ன பிரச்னை? சற்று விரிவாகச் சொல்லுங்கள்!'' என்று நேரிடையாக விஷயத்திற்கு வந்தது வசுமதியை வியர்க்க வைத்தது.



வங்கியில் சக ஊழியைகளுடன் பேசும் போது, அந்த எண்ணம் வலுப்பட்டது. 'மனசு ஒத்துக் கொள்ளாமல் வாழ்வது நரகம். விரும்பியது அடையாமல் போனால் வாழ்க்கை எதற்கு? வாழ்க்கை என்பது சந்தோஷமானதல்லவா? அது இல்லாமல் அந்த வாழ்க்கை எதற்கு? தன் மாதிரியான எண்ணமும், நடவடிக்கையும் இல்லாத கணவனுடன் வாழ்வது தேவையில்லாதது, அடிமைத்தனமானது' என்று, ஏதோ ஓர் அமைப்பிலிருக்கும் ஒரு பெண்மணி பேச, வசுமதிக்குத் தன் எண்ணம் வலுப்படலாயிற்று. 'வாழ்க்கைன்னா பிரச்னைகள் இருக்கத்தான் செய்யும்!' என்று சொன்ன வயதான ஊழியையின் பேச்சு அடக்கப்பட்டது.

விவாகரத்து பற்றி சகலமும் ஆராயப்பட்டது. தோழிகள் தகவல்கள் தர, அனைத்தும் தெரிந்து கொண்ட வசுமதிக்கு, விவா

கல்யாணத்திலிருந்து மளிகைக் கடை வரை சகலமும் சொன்னாள். ''அவரை எனக்கு சுத்தமாகவே பிடிக்கல. நடவடிக்கைகள் பிடிக்கல. குறிப்பா வீட்டுக்கு நேரங் கழிச்சு வர்றது, குடிச்சுட்டு வர்றது, என்னோட வார்த்தைக்கு மதிப்பளிக்காம...'' என்று அடுக்கினாள்.

''வேற எதுனா காரணங்கள் சொல்ல முடியுமா?''

''கருத்தொற்றுமையில்லை. சிந்தனைகள், எண்ணங்கள் கூட ஒத்து வருவதில்லை. அதனால் கோ-ஆபரேட் ஆவறதில்லை. ஒரு பிரச்னையைக் கையாளும் போது கூட ஒற்றுமையில்லாமை. எதற்கும் ஒத்துவராத தன்மை. இந்த நிலைமை மேலும் மேலும்

மோகன் ராஜ்

பிரச்னைகளை ஏற்படுத்தத்தான் செய்யுது. அதனால விலகிடறது நல்லதுன்னு தோணுது.''

''தர்மசங்கடமான கேள்விதான். விவாகரத்துக்குப் பின்னாடி என்ன செய்யலாம்னு இருக்கீங்க? மறுபடியும் மேரேஜ் பண்ணலாம்னு எதுனா ஐடியா வச்சிருக்கீங்களா?''

தானே யோசிக்காத ஒன்றை, நினைக்காததை இப்படியா! என்று கேட்ட போது வசுமதிக்கு வியர்த்தது.

''முடிவாச் சொல்ல முடியாது, ஆனா இப்ப அந்த மாதிரி எண்ணம் எதுவுமில்லை.''

''திருமணம் என்பதை எப்படி புரிகின்றீர்கள். திருமணம் என்பது ஆணும் பெண்ணும் ஒருவரையொருவர் புரிந்து, விட்டுக் கொடுத்து, நாங்கள் ஒருவரையொருவர் நேசித்து ஒற்றுமையாய் இருப்போம் என்று முடிவெடுத்ததுதானே! உங்கள் திருமணம் உங்கள் முழு சம்மதத்தோடுதானே நடந்தது?''

''ஆமாம்.''

''பிரச்னைகள் வருவதாகச் சொல்கிறீர்கள். பிரச்னை என்பது சகலருக்கும் பொது. பிரச்னைகள் வந்தால், உறவை ரத்து செய்துவிட்டால் போதுமா? இது பிரச்னைகளைச் சமாளிக்க முடியாத் தன்மையையும், பொறுத்துப் போகாததையும்தானே காட்டுகிறது. பிரிந்து போவது என்பது கோழைத்தனம், கையாலாகாத்தனம்.''

''எப்படிப் பொறுத்துக் கொள்ள முடியும். குடிச்சிட்டு வர்றது எனக்கு சுத்தமாகப் பிடிக்காது. இங்கு நான் எப்படிப் பொறுத்துப் போக முடியும்? நிச்சயமாய் முடியாது.''

''பொறுத்துப் போக முடியாது என்கிறீர்கள். அப்புறம் ஏன் திருமணம் செய்தீர்கள். அப்படி இருப்பவர்கள் திருமணம் என்ற ஒன்றை ஏன் தேர்ந்தெடுக்கிறீர்கள். பிரியப்பட்டவர்களுடன் வாழ்வதும், பிரச்னை வந்தால் வேறொருவருடன் வாழ்வதாகவும் இருக்கலாமே!

''உறவு என்பதை ஏன் ஏற்படுத்துகிறீர்கள். உறவு என்பது எப்படி ரத்தாகும். ரத்து செய்ய முடியும். ஒரு தாய் - குழந்தை உறவு எப்படி உண்மையானதோ, அது போல்தான் கணவன் - மனைவி உறவும். கணவன் - மனைவி உறவில் மட்டும் ஏன் இப்படிச் செய்கிறீர்கள்?''

''திருமணம் என்பது - அந்த உறவு என்பது - பிரண்ட்ஷிப் மாதிரி இருக்கணும்னு நான் நினைக்கறேங்க.''

''நீங்க தவறாப் புரிஞ்சுக்கிட்டிருக்கீங்க வசுமதி. திருமணம் என்பது ரிலேஷன்ஷிப். அது ஒருபோதும் பிரெண்ட்ஷிப் ஆகாது. பிரச்னை வரின் நண்பர்கள் பிரியலாம். ஆனால் உறவு என்பது எப்படி ஒரு கால கட்டத்தில் பிரிய முடியும்? திருமணம் செய்து கொண்டோம் எனும்போதே ஒருவரிடம் உள்ள நிறை குறைகளை ஏற்றுக் கொள்வதுதான். இங்கு இருவரில் யார் தவறு செய்தாலும், பொறுத்துக் கொள்வது அல்லது மாற்ற முயற்சி செய்வது மற்றவர் கடமையாகும். இருவரும் ஒன்று என்று வரும் பொழுது அங்கு தவறு செய்தல் என்பது எப்படி முக்கியமாகும்?

''இதற்கு விசாலமான அன்பு வேண்டும். கேரக்டரை விட்டு மனிதனை நேசிக்க வேண்டும். குணநலன்கள் மாறுவதும், எண்ணம் மாறுவதும் இயற்கை. இங்கு அன்பு எப்படி மாறி மாறி வரும். அன்பு நிலையானது. 'நீ நேசித்தால் மட்டுமே என்னாலும் நேசிக்க முடியும்' என்பது வியாபாரத்தனமானது. ஒருவரை அவருக்குள்ள சகல குணநலன்களுடன் ஏற்றுக் கொள்வது அன்பு. எதிர்பார்ப்பில்லாதது. சகலத்தையும் பொறுத்துக் கொள்வதே அன்பு!

''உங்களால் உங்கள் கணவரிடம் கூட அப்படி இருக்க முடியவில்லை. பொறுத்துப் போதல் என்பது கணவனிடமே முடியவில்லை என்றால், உலகத்தோடு எப்படி இயைந்து வாழ முடியும்? உங்கள் கணவரிடம் உங்களுக்கு ஏற்பட்டிருக்கும் பிரச்னைகள் ரொம்பவும் அற்பமானவை. அடிப்படையில் உங்களிடம்தான் கோளாறு இருக்கிறது. நன்றாக யோசித்துப் பாருங்கள்...''

இருட்டி விட்டதால் வசுமதி மறுக்க மறுக்க, தன் காரிலேயே கொண்டு வந்து வீட்டில் விட்ட போது வசுமதி அவர் அன்பில் திக்குமுக்காடிப் போனாள்.

**வ**சுமதிக்கு வேலையில் மனம் லயிக்கவில்லை. ஏன் ஒரு வக்கீலுக்கு கிளையண்ட் மேல் இவ்வளவு அக்கறை வருகிறது. அண்ணன் மாதிரி இவ்வளவு அட்வைஸ் பண்றார். யோசிக்க யோசிக்க, அவர் மேல் மதிப்பு அதிகமாயிற்று. அவர் சொல்வது உண்மைதானோ, நான் செய்வதுதான் தவறோ என்ற எண்ணம் வந்தது. உடனே அதுபற்றி சக ஊழியைகளுடன் பேசச் சொன்னது.

வசுமதி சொல்ல அவர்கள் சிரித்தார்கள். ''என்ன மனசோ உன்னோடது. அவா சொல்லிண்டா அது நிஜமாயிடுமா? அவா அவா அட்வைஸ் பண்ணிண்டுதான் இருப்பா. ஆயிரம் பேர் ஆயிரம் விதமாய்ச் சொல்வா. நாமதான் நம்ம நிலையில் ஸ்டெடியாக இருக்கணும்.''

இவர்கள் சொல்ல, வசுமதிக்குக் குழப்பம் அதிகரித்தது. இரண்டும் உண்மைதானோ? எதை எடுத்துக் கொள்வது என்று எண்ண வைத்தது.

'நாளைக்கு மத்தியானம் வர முடிஞ்சா வாங்களேன்...' என்று அவர் சொன்னது

ஞாபகம் வர, அரை நாள் லீவு போட்டு அவர் கொடுத்த விலாசம் தேடி வீடு கண்டு பிடித்து, காவலாளியிடம் விவரம் சொல்லி உள்ளே காத்திருந்த போது ஏதோ சப்தம். அதைத் தொடர்ந்து, ஒரு நாற்பது வயதுப் பெண்மணி அலையக் குலைய ஓடி வந்தாள். பின்னால், "போகாதே, போகாதே!" என்று சொல்லிக் கொண்டு வக்கீல் ஓடி வந்து கொண்டிருந்தார். அந்தப் பெண்மணி தட்டுத் தடுமாறி கீழே விழவும் வக்கீல் தாங்கிக் கொண்டார்.

"ஸாரிம்மா! ஒரு அஞ்சு நிமிஷம் வெயிட் பண்ணுங்க..." என்று சொல்லி விட்டு, வக்கீல் அந்த பெண்மணியைத் திமிற திமிற அணைத்தபடி உள்ளே கூட்டிப் போனார்.

வசுமதிக்குத் தர்மசங்கடமாகவும், அதே சமயம் என்னவோ என்று யோசனையும் வந்தது.

"இப்ப ஓடி வந்தாளே அவதான் என்னோட வொய்ஃப்! பேர் சுகந்தி. உங்களுக்கு என்ன ஏதுன்னு தோணும்? போதைப் பழக்கம்!" என்று அவர் சொன்ன போது, மொத்தமாய் ஒரு பரிதாபம் வந்தது.

"மொதல்ல இருந்தே இந்தப் பழக்கம் இருக்கும் போல. கல்யாணம் செய்யும் போது யாரும் சொல்லலை. அதுக்குப் பின்னாடியும் ரொம்ப நாள் கழிச்சுத்தான் எனக்குத் தெரிஞ்சது. ஆரம்பத்திலேயே சொல்லியிருந்தா குணப்படுத்தியிருக்கலாம். இப்ப ரொம்ப முத்தின ஸ்டேஜ். அது இல்லாம அவளால இருக்கவே முடியறதில்ல!"

வசுமதிக்கு நெஞ்சு அரித்தது.

"டாக்டர்கிட்ட கூட்டிண்டு போகணும். கொஞ்சம் வெயிட் பண்ணுங்க. டிரைவர் கிட்ட சொல்லிட்டு வந்துர்றேன்."

அவர் செல்லவும், பார்வை ரூமைச் சுற்றியது. அந்தப் பெண்மணியைப் பார்க்கும் போது வசுமதிக்கு துக்கம் தொண்டையை அடைத்தது. என்ன உன்னதமான, உயர்வான - மனைவியை அப்படியே தானாக ஏற்றுக் கொள்ளும் - அன்பு. வசுமதி விசும்பி, விசும்பி அழுதாள். உள்ள அடி ஆழத்திலிருந்து வேகமான அழுகை பீறிட்டுக் கொண்டு வந்தது.

பத்து நிமிடம் கழித்து வக்கீல் வந்தார். "வெளியில போய் உட்கார்ந்துக்கலாம். அரைமணி நேரத்துல போயிடலாம் வாங்க..."

"பரவாயில்லீங்க. அவங்கள ஆஸ்பத்திரிக்குக் கூட்டிட்டுப் போங்க. நான் நேரங் கெடச்ச போது வரேங்க..." என்று சொல்லி விட்டு வசுமதி வெளியே வந்தாள்.

உலகம் பிரகாசமாய்த் தெரிந்தது. அவளுக்குப் புரியும் தான் யாரென்று; ஒவ்வொரு நிமிடமும் எவ்வளவு உன்னதமானதென்று!

தியேட்டரில் படம் ஓடிக் கொண்டிருந்தது. ராஜாவின் உடலில் வியர்வை ஓடிக் கொண்டிருந்தது.

ஹீரோ அடியாட்களைப் போட்டு புரட்டிக் கொண்டிருந்தார் திரையில்.

இவனுக்கும் தியேட்டர் அதிபரையும், மானேஜரையும் அதே போல் அடித்து, நொறுக்க வேண்டும் போல் ஆத்திரம் வந்தது. ஏ.சி. தியேட்டராம், ச்சே!

இருக்காதா பின்னே? டிக்கெட் விலையோ பத்தே கால் ரூபாய். ஏ.சிக்கும் சேர்த்தே கட்டணம். கொள்ளை விலை தான். ஆனால் இந்த தியேட்டர்காரர்கள் பணத்தை வாங்கிக் கொண்டு செய்து தர வேண்டிய வசதிகளை மக்களுக்கு மறுக்கிறார்களே!

அனைவரின் மூச்சுக் காற்றும் அடைபட்ட அரங்கினுள்ளேயே சுழன்று, சுழன்று... ப்ச, வியாதியல்லவா வரும்.

எழுந்து போய்த் தியேட்டர் மானேஜர் அறையை அடைந்து ஏன் ஏசி போடப்பட வில்லை என்று கேட்டான்.

மானேஜர் இவனை ஏற இறங்கப் பார்த்தார். அப்போது, அடியாட்கள் போலிருந்த இரண்டு பேர் உள்ளே நுழைந்து, ''என்ன சார் விஷயம்?'' என்று மானேஜரைக் கேட்டார்கள்.

''சாருக்கு ஏ.ஸி. போடணுமாம்!'' என்று அவர், இவன் பக்கம் கைகாட்டினார்.

அந்த இருவரின் பார்வையும் இவன் மேல் படர்ந்தது. ''அத்தனை பேர் கம்மா படம் பார்க்கிற போது, உங்களுக்கு மட்டும் என்ன சார்? பேசாம போய்ப் படத்தைப் பாருங்க. இல்லைன்னா.... எங்களுக்கு ஒன்னுமில்லை... சாருக்குத் தான் கஷ்டம்...!'' என்று இவனருகில் வந்தார்கள்.

இனியும் அங்கு நின்று பேசுவது விபரீதமாகும் என்பதை உணர்ந்து, மீண்டும் வந்து படம் பார்க்கத் துவங்கினான்.

ஆயினும், எப்படியாவது அந்த தியேட்டர்காரர்களைத் தண்டித்தே ஆக வேண்டும் என்ற வெறி அவனுக்குள் எழுந்தது.

என்ன செய்யலாம்?

யோசிக்கும்போதே படத்தில் ஹீரோவும், ஹீரோயினும் அணைத்துக் கொள்ள 'கபம்' போட்டு விட்டார்கள்.

கர்சீப்பால் வழியும் வியர்வையைத் துடைத்தபடி ஆத்திரம் அடங்காமல் வெளியே வந்தான்.

ஒரு முடிவுடன் வேகமாய் நடந்தான் ராஜா.

மறுநாள் -

ராஜா பப்ளிக் டெலிபோன் பூத்தை நெருங்கினான்.

சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டான். யாரும் கவனிக்கவில்லை.

பொருளாதார நஷ்டம் தியேட்டர்காரனுக்கு ஏற்படுத்த ஒரே வழி, மாலைக் காட்சியை நடத்த முடியாமல் செய்து விட வேண்டும்.

எண்களைச் சுழற்றினான்.

''ஹலோ அம்பிகா தியேட்டர்?''

மனதைத் திடப்படுத்திக் கொண்டான். இது ஒன்றும் தவறில்லை. அவர்களுக்கு இப்படித்தான் தண்டனை கொடுக்க முடியும், தன்னைப் போன்ற சாதாரண மனிதனால்.

''எஸ், அம்பிகா தியேட்டர்...''

கர்சீப்பால் போன் வாயை மூடினான் அவசரமாய்.

''உங்க தியேட்டரில் குண்டு வைச்சிருக்கு. சரியாய் மாலைக்காட்சி நடக்கும் போது வெடிக்கும்.''

சட்டென ஃபோனை வைத்து விட்டு, மனதில் படர்ந்த திருப்தியுடன் வெளியே நடக்கலானான்.

- கிருஷ்ணா

# தண்டனை



# பாண்டியன் மகள்

## 45. மலைப்பாதையில் மாறவர்மன்

கூடாரத்தின் மீது பறந்து கொண்டிருந்த மீன் கொடி, முன்னிரவின் குளிர்ந்த காற்றில் படபடத்துக் கொண்டிருந்தது. காற்றின் வேகத்தில் அது படபடத்ததா, அல்லது முதல் நாள் நடந்த போரின் போக்கைக் கண்டு நடுங்கியதா என்பது புரியவில்லை. கொடியின் படபடப்பை விட, உள்ளே அமர்ந்திருந்த மாறவர்மனின் மனம் அதிகமாகப் படபடத்துக் கொண்டிருந்தது. எதிரில் அமர்ந்திருந்த மார்த்தாண்டனின் வார்த்தைகளோ, மோகூர்ப் பழையனின் சொற்களோ, படைத் தலைவர்களின் பேச்சோ அவன் படபடப்பைச் சற்றும் குறைக்கச் சக்தியற்றிருந்தன. முதல் நாள் போரின் முடிவில் கூடியிருந்த பாண்டியரின் அந்தச் சபையில், வீர மரணம் அடைந்து விட்ட கொங்கு மன்னனையும், களத்தில் ஆரம்ப முதலே தென்படாத பராக்கிரமபாகுவையும் தவிர மற்ற உபதலைவர்கள் அனைவரும் இருந்தனர்.

''மாறவர்மா, நமக்கு எதிரிலிருக்கும் விக்கிரமன் படையையும், குமரியிலிருந்து வந்து சேர்ந்து கொண்ட படையையும் சேர்த்துப் பார்த்தாலும் நம்மை விட எண்ணிக்கையில் குறைவாகத்தானிருக்கிறது!'' என்றான் மார்த்தாண்டன்.

''எண்ணிக்கை மட்டும் போரின் முடிவை நிர்ணயிப்பதில்லை, மார்த்தாண்டரே! மேலும் சோழனின் முழுப் படையும் இன்னும் வந்து சேரவில்லை...'' என்ற பழையனை இடைமறித்தான் மாறவர்மன். ''பழையரே, உங்கள் மன்னரை இழந்ததால் நீங்கள் அதைரியப்படுகிறீர்கள். நாம் கோட்டாற்றங்கரையிலிருந்து வடமேற்காக இருபது காதத்துக்கு மேல் முன்னேறியிருக்கிறோம்'' என்றான்.

''உண்மைதான். ஆனால் விக்கிரமன் பின்வாங்குகிறானா? அல்லது நம்மை வடமேற்காக இழுத்துச் செல்கிறானா என்பது தான் புரியவில்லை'' என்றான் பழையன்.

தொடர்ந்து அவையில் பல ஆட்சேபக் குரல்கள் எழுந்தன. கூச்சலிட்டவர்களை வெறுப்புடன் நோக்கிய பழையன், இருக்கையில் அமர்ந்தான். அதன் பிறகு அவை முடியும் வரை அவன் வாயைத் திறக்கவே இல்லை. அந்தப் போரின் முடிவைப் பற்றி ஒரு தீர்மானத்திற்கு அவன் அப்போதே வந்து விட்டதாகத் தோன்றியது.

என்ன விவாதித்தும் சேரர் உதவிப் படை வராமற்போனதன் காரணமோ, ஈழத்துப் படை தீவிரமாகத் தாக்குதலை நடத்தாமல் தற்காப்புப் போர் நடத்துவதன் காரணமோ, தங்களை வடமேற்கில் விக்கிரமன் இழுப்பதன் காரணமோ அறிய இயலாத அந்த அவை, மறுநாள் அணிவகுப்பையும் முன்னேறும் வழியையும் பற்றி மட்டும் விவாதித்து மெல்லக் கலைந்தது.

தன் கூடாரத்திற்குத் திரும்பிய பின்னும் பழையனின் மௌனம் கலையவில்லை. மறுநாள் வெள்ளி முளைக்கு முன் எழுந்து விட்ட பழையனின் முகத்தில் ஆழ்ந்த சிந்தனை நிலவியது. தன் உபதலைவனை அழைத்து வர வீரனை ஏவியவன் கைகளைக் கட்டியபடி உலவிக் கொண்டிருந்தான். உபதலைவன் உள்ளே நுழைந்த போது பழையனின் முகம் கல்லாக இருந்தது.

''முத்துப் பாண்டியா, நீ இன்று போருக்கு வர வேண்டாம்'' - என்றான் பழையன்.

முத்துப் பாண்டியன் என்றழைக்கப்பட்ட அந்த உபதலைவன் விக்கித்து நின்றான். எந்தப் போரைத் தங்களது விடுதலைப் போராக எண்ணி ஆயத்தங்கள் செய்தானோ, எந்தப் போரை, இறந்த கொங்கு நாட்டை மீட்க நடக்கும் போராக எண்ணினானோ, அந்தப் போரில் கலந்து கொள்ள வேண்டாமென பழையன் கூறுவதைக் கேட்டு திகைத்தான் அவன்.

''படைத்தலைவரே...'' என்று ஏதோ கூறவந்த முத்துப்பாண்டியனை பழையனின் கரம் உயர்ந்து தடுத்தது.

''முத்துப் பாண்டியா, உன் துடிப்பை நான் அறிவேன். நான் கூறுவதை கவன



மாகக் கேள். கொங்கு நாடு மன்னனை இழந்து விட்டது. இளவல் குலசேகரர் என்ன ஆனார் என்பது தெரியவில்லை. பராக்கிரமபாகுவைக் காணவில்லை. கொற்கையின் நிலை எனக்கு சந்தேகத்தைத் தருகிறது. இந்தப் போரின் முடிவில் நான் இருப்பேனா என்பதும் தெரியவில்லை...'' சொல்லிக் கொண்டே போனவனை முத்துப் பாண்டியனின் உரத்த குரல் ''படைத் தலைவரே...'' என்று இடைமறித்தது.

''சற்றுப் பொறு முத்துப்பாண்டியா. உண்மை இதுதான். இந்தப் போரில் நாம் வெற்றி பெறப் போவதில்லை. விக்கிரமன் நம்முடன் போரிடுவது போல போக்குக் காட்டிக் கொண்டிருக்கிறான். சேரலாதர் படையை விக்கிரமன் எந்த வகையிலோ தடுத்திருக்க வேண்டும். பராக்கிரமபாகு காணப்படாததற்கும் தகுந்த காரணமிருக்க வேண்டும்.''

முத்துப்பாண்டியன் அடித்து வைத்த சிலையாக நின்றிருந்தான். பழையனின் குரல் திடமாக ஒலித்தது. ''நீ உடனே

விஷ்வக்சேனன்

புறப்படு. குலசேகரனை எந்த வகையிலாவது காப்பாற்றி உத்தமபாளையத்தில் அவன் மாமனிடம் சேர்த்து விடு.''

படைத்தலைவன் கூறியதைக் கேட்ட முத்துப்பாண்டியன் தன் மீது பெரும் பொறுப்பு சுமத்தப்படுவதை உணர்ந்தான்.

தலைவணங்கி உத்தரவை ஏற்ற முத்துப்பாண்டியனைக் கண்ட பழையனின் முகத்தில் ஒருவித திருப்தி தெரிந்தது.

''சென்று வா, முத்துப் பாண்டியா'' என்று விடையளித்த பழையனை நன்றாக ஏறெடுத்து நோக்கினான் முத்துப்பாண்டியன். மன்னன் கொடுத்த வாக்கிற்காகக் கடமையை மீறாத அந்த மகாவீரனைப் பார்ப்பது அதுவே கடைசி முறை என்பதை உணர்ந்ததாலோ என்னவோ, கலக்கமென்பதை அன்று வரை அறியாத அந்தக் கொங்கு நாட்டு மறவனின் விழிகள் லேசாகக் கலங்கியிருந்தன.

விடைபெற்றுக் கொண்டு கொற்கையை நோக்கிப் பயணப்பட்ட முத்துப் பாண்டியன், அவன் செல்லுமுன்பே கொற்கை, சோழர் வசமானதை அறியவில்லை.

கதிரவன் உதித்த ஒரு ஜாமத்தில் அணி வகுத்த பாண்டியர் படையின் முன்வரிசைக்கு வந்த மாறவர்மன் திகைத்தான். முன்தினம் இருந்ததைப் போல் இரு மடங்கு சோழர் படை எதிரில் அணிவகுத்து நின்றிருந்தது. யானைப் படையின் அளவு பெரிதும் கூடியிருந்தது. தேர்களின் வரிசை, ஆயுதங்கள் பளபளக்க, வெகுதூரம் வரை நீண்டிருந்தது.

மாறவர்மன் மட்டுமின்றி, மார்த்தாண்டனும் மற்ற உபதலைவர்களும் கூட திகைத்தனர். மோகூர்ப்பழையன் முகத்தில் மட்டும் அமைதி குடிகொண்டிருந்தது. வறண்ட புன்முறுவலொன்றும் அவன் முகத்தில் நிலவியது.

மாறவர்மன் திகைப்பு அடங்குமுன் ஊதப்பட்ட தாரைகளைத் தொடர்ந்து பழையனின் புரவிப்படை முன்னால் பாய்ந்து விட்டது. தவிலையில் அரையனால் கைப் பற்றப்பட்ட போர் யானைகள் பெரும் சீரத்தைத் தூக்கிக் கொண்டு நிலம் அதிர பழையனின் படைப் பிரிவைச் சூழ்ந்து கொண்டன.

காற்றைக் கிழித்துப் பறந்த அம்புகளும், ஈட்டிகளும் ஒன்றோடொன்று மோதிய வாட்களும், நீண்ட சர்ப்பங்களைப் போல ஊர்ந்து வந்த ரத வரிசைகளும் கோட்டாற்றங்கரைக்கு வடமேற்கே இருபத்தாறாவது காதத்திலிருந்த அந்தச் சமவெளியில் பெரும் ரணகளத்தை சிருஷ்டித்தன.

முதல் நாள் முழுதும் பின்வாங்குவதாகப் பாவனை செய்த விக்கிரமனின் படை அன்று முழு வேகத்தில் தாக்கத் தொடங்கியது.

சோழப் படைகள் வகுத்திருந்த சர்ப்ப வியூகம், பாண்டியர் படையை சுற்றிச் சுற்றி வளைத்துப் பின்னியது, நெருக்கியது. சிறு சிறு பிரிவுகளாகப் பிரித்துத் திணறடித்தது.

கதிரவன் உச்சியை அடையும் நேரத்தில், போர் உக்கிரமாவதைக் கண்ட விக்கிரமன், தன் நீண்ட வாளை வானில் உயர்த்தி, இருமுறை ஆட்டினான். அவன் சமிக்ஞையைத் தொடர்ந்து சோழப் படையின் சர்ப்ப வியூகத்தில் பெரும் மாறுதல் ஏற்பட்டது.

மூன்று பிரிவுகளாகப் பிரிந்த சர்ப்ப வியூகம் பழையனையும் சோமசுந்தரனது படைகளையும் ஒரு பிரிவாகவும், மாறவர்மனையும் மார்த்தாண்டனையும் சேர்த்து ஒரு பிரிவாகவும், ஈழத்துப் படையும் எஞ்சிய பாண்டியர் படையும் ஒரு பிரிவாகவும் பிரித்து, அவற்றைச் சுற்றி வளைத்துத் தாக்கத் தொடங்கியது.

விக்கிரமனின் போர்த்திறனையும் படைகளைக் கச்சிதமாகப் பிரித்து, அணி வகுத்து நடத்திய விதத்தையும் கண்ட பழையன், உள்ளூர அவனைப் பெரிதும் சிலாகித்தான். ஆனால் அவனைச் சுற்றி வளைத்த யானைகளும், பொழியப்பட்ட அம்புகளும் வேல்களும் அவன் பார்வையை மறைத்து, மேற்கொண்டு விக்கிரமனைப் பார்த்து ரசிக்க இயலாமல் செய்தன. நரசிங்கராயன் தன் புரவியை பழையனை நோக்கிச் செலுத்தினான்.

ஈழத்துப் படை அதுவரை செய்த தற்காப்புப் போர் பயனற்றுப் போனது. சுற்றிலும் வளைக்க முயன்ற சோழ வீரர்களிட

## அருள்வாக்கு

''எங்கோ தூரத்தில் இருக்கிறான் ஸ்வாமி என்று ஊரெல்லாம் சுற்றுகிறாயே! தெரியாதவரையில் அவன் தூரத்தில் இருப்பவன்தான். ஊரெல்லாம் சுற்றினாலும் அவனைப் பார்க்க முடியாது. அவன் உன்கிட்டேயே இருப்பவன்தான். தூராத்தூரே அந்திகே ச - 'தூரத்திற்கெல்லாம் தூரம், சமீபத்திற்கெல்லாம் சமீபம்' என்று ச்ருதி சொல்கிறது.

ஹொரைஸன் என்பார்களே, தொடுவானம்; இங்கிருந்து பார்த்தால் ஆகாசமும் பூமியும் அந்த இடத்தில் சேருவது போல இருக்கும். அங்கே ஒரு பனைமரம் இருக்கிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். 'அந்தப் பனை மரத்தடிக்குப் போனால், பூமியும் வானமும் சேருகிற இடத்தைப் பிடித்து விடலாம்' என்று



இங்கே இருந்து பார்க்கிற போது நமக்குத் தோன்றும். ஆனால் அங்கே போனால், தொடுவானமும் அங்கிருந்து வெகுதூரத்திற்கு அப்பால் போய் விட்டது போலத் தெரியும். நாம் போகப் போக அதுவும் போய்க் கொண்டே இருக்கும். 'இந்தப் பனைமரத்தில் வந்து நின்றால் தொடுவானம் வெகுதூரத்திற்குப் போய் விட்டதே, அதைப் பிடிக்க இன்னும் நாமும் போக வேண்டும்' என்று போய்க் கொண்டிருந்தால், அதைப் பிடிக்க முடியுமா? இந்தப் பனை மரத்துக்கு வெகு தூரத்தில் இருந்து பார்க்கும் போது இந்த இடத்தில்தான் தொடுவானம் இருப்பது போல இருந்தது. இந்த இடத்திற்கு வந்தவுடன், அது நம்மை விட்டு இன்னும் வெகுதூரத்திற்குப் போய் விட்டது போலத் தெரிகிறது. ஆகவே அது எங்கே இருக்கிறது? நீ இருக்கிற இடத்தில்தான் இருக்கிறது. நீ இருக்கிற இடந்தான் அது. அப்படி 'அது' 'இது' என்று சொல்லப்படுகிற, வெகு தூரத்தில் இருக்கிற ஸ்வாமி, உன்னிடமே - உன் உள்ளேயே இருக்கிறது. 'நீயே அதுதான்' என வேதம் உணர்த்துகிறது.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

மிருந்து தப்ப, அவர்கள் தெற்கே பின்னடைந்து கோட்டாற்றையும் தாண்டி விரைய வேண்டியதாயிற்று.

இனி இந்தப் போரினால் எந்தப் பயனுமில்லையென்பதையும் விக்கிரமனை இனி சமாளிப்பது இயலாத காரியம் என்பதையும் தெளிவாக உணர்ந்து கொண்ட மார்த்தாண்டன், மாறவர்மனையும் எஞ்சிய தனது வீரர்களையும் அழைத்துக் கொண்டு நீண்ட மலைகளும் வனங்களுமாக இருந்த சேரன் எல்லைப்புறத்தை நோக்கி ஓட ஆரம்பித்தான்.

விக்கிரமனின் படைகள் தன்னைப் பின்புறத்தில் புயலெனப் பாய்ந்து வந்து நெருங்குவதை உணர்ந்ததோடு அவர்களிடம் சிக்கினால் தனக்கு என்ன நேரும் என்ற எண்ணமும் பிடரியை உந்தித் தள்ள, ஒரு பிரிவு வீரர்களை நின்று போராட உத்தரவிட்ட மாறவர்மன், மார்த்தாண்டனைத் தொடர்ந்து தன் புரவியைத் தட்டி விட்டான். தப்ப இருந்த ஒரே வழியான மலைக் கணவாயை நோக்கி விரைந்தான்.

மலைக்கணவாயில் எப்போதும் வீசும் கடுங்காற்று அன்றும் பலமாகவே வீசிக் கொண்டிருந்தது. காற்றில் வளைந்து ஒடிந்து விழுவதைப் போல் ஆடிக் கொண்டிருந்த மரங்கள் மார்த்தாண்டனை வரவேற்றன.

படையில் சிதறிய சிறு பிரிவொன்றுடன் மார்த்தாண்டனைத் தொடர்ந்து கணவாயில் நுழைந்து விட்ட மாறவர்மனின் மனம், ஓடிக் கொண்டிருந்த புரவிகளை விட வேகமாக ஓடிக் கொண்டிருந்தது. தொடர்ந்து வந்து கொண்டிருந்த சோழர் படை பின்தங்கி விட்டதாகத் தோன்றியது அவனுக்கு. அல்லது பாண்டிய வீரர்களால் தடுத்து நிறுத்தப்பட்டிருக்க வேண்டும் என்று நினைத்தான் அவன்.

தற்போது சேர நாட்டை அடைந்து விடுவதே அவனது நோக்கமாக இருந்தது. சேரலாதர் உதவியுடன் மீண்டும் படை திரட்டுவது பற்றியோ, சிதறிப் போன தனது படையை மீண்டும் ஒன்று சேர்ப்பது பற்றியோ சிந்திக்கலாம் என்ற ஒரே நம்பிக்கையுடன் விரைந்து கொண்டிருந்தான் மாறவர்மன்.

உத்தமபாளையத்து மன்னன் தன் படையுடன் உதவிக்கு வருவதாக அனுப்பியிருந்த தகவலின்படி கழுகு மலையடிவாரத்துக்கு வந்ததாகத் தெரியவில்லை. அதற்கான காரணமும் புரியவில்லை.

சேரர் படைத்தலைவன் கங்காதரன் அனுப்பிய ஓலையின்படி, சேரர் உதவிப் படை கணவாயில் காணப்படாததும் அவனுக்கு விளங்கவில்லை.

குழம்பிய மனநிலையிலேயே புரவியைச் செலுத்திய மாறவர்மன், சேர நாட்டையடைந்ததும் முதலில் அந்தச் சேர ஒற்றன் சமுத்திரபந்தனைத் தேடிப் பிடித்து, தனக்குத் தவறான தகவல்களைக் கொடுத்து ஏமாற்றியதற்காகச் சேரலாதரிடம் கூறி தண்டிக்க வேண்டும்; அல்லது தானே அவனைத் தண்டிக்க வேண்டும் என்று நிர்மாணித்தான்.

முன்னே சென்ற மார்த்தாண்டன் நிலையோ விவரிக்க இயலாததாயிருந்தது. மாறவர்மனை மன்னனாக்கவும், சுதந்திரமான பாண்டிய அரசைப் பெறவும் தான் எடுத்துக் கொண்ட முயற்சிகள் அனைத்தும் பயனற்றுப் போய் விட்டதையும் இனி மீண்

டும் இந்தகைய படையைத் திரட்ட அரும்பாடுபட வேண்டியிருக்கும் என்பதையும் எண்ணியவன், தனக்கு சாத்தியமான வழிகளையெல்லாம் சிந்தித்தபடி வந்து கொண்டிருந்தான்.

பாதையில் செழித்துக் கிடந்த செடிகொடிகளும் தாழ்ந்த மரக் கிளைகளும் வழியை மறிப்பதும், மேலே உரசித் தடை செய்வதுமாக இருக்க, ஏற்கெனவே ஆத்திரத்தின் வசப்பட்டுக் கிடந்த மார்த்தாண்டன் இதனால் மேலும் எரிச்சலுற்று, தன் சினத்தைப் புரவியின் மீது காட்டினான். அந்தப் புரவி, மலைப் பாதையில் காற்று வேகத்தில் பாய்ந்து ஓடலாயிற்று.

தாழ்ந்த கிளைகளும் அவற்றில் பின்னிக் கிடந்த கொடிகளும் மார்த்தாண்டனை உரசி இழுக்கக் கீழே விழாமல் புரவி மீது அமர்ந்திருக்கவே அவன் பெரும் பிரயாசைப்பட வேண்டியதாயிற்று.

**மா**லை நெருங்கி விட்டதால் கதிரவன் மலைச்சரிவுகளின் பின்னே மறைய ஆரம்பித்திருந்தான். குளிர் நிறைந்து வீசிய காற்று மார்த்தாண்டனை உறைய வைத்தது. பாதையின் வளைவுகளைக் கடக்கும்போதெல்லாம் தான் விழுந்து விடப் போவதாகவே எண்ணினான்.

ஆத்திரமடைந்து ஆவேசமாகப் பாய்ந்த குதிரையை நீண்ட முயற்சிக்குப் பின் இழுத்துப் பிடித்து நிறுத்தினான். அங்கிருந்து கீழே நோக்கிய போது, சற்று தூரத்தில் வாட்களையும் வேல்களையும் தாங்கிய வீரர்கள் அணிவகுத்து நிற்க, முகப்பில் தன் நீண்ட வாளுடன் புரவி மீது அமர்ந்திருந்தான் அரையன் மதுராந்தகன்!

புரவியில் அமர்ந்திருந்தவனது தோரணையும் அவன் நீண்ட வாளும் அவன் சமுத்திரபந்தன்தான் என்பதைத் தெளிவுபடுத்தினாலும், முகம் முதுமையை இழந்து இள வயதைக் காட்டியதால் சற்றுக் குழப்பமாகவே இருந்தது மார்த்தாண்டனுக்கு. மலைக்குப் பின் மறைந்து விட்ட கதிரவன் வீசிய மங்கிய ஒளியில் எதிரில் நின்றவனைக் கூர்ந்து நோக்கினான்.

அந்த முகமும் அந்த உயரமும் அவன் நினைவுகளை மேலைமங்கலத்திற்கு அழைத்துச் சென்றன. சமுத்திரபந்தன் என்ற பெயரில் அதுவரை தான் அறிந்திருந்தவன் உண்மையில் சோழ நாட்டவனே என்ற உண்மையும் அவனுக்குப் புலப்பட்டது. அவன் எண்ண அலைகள் சேர நாட்டிலும் கொற்கையிலும் நடந்த சம்பவங்களை நினைவுகூரவே தனது இந்தத் தோல்விக்குப் பல நாட்களுக்கு முன்பே சமுத்திரபந்தன் திட்டம் வகுத்து விட்டான் என்பது புரிந்தது. எதிரில் நிற்பவனையும் அவன் பின்னால் நின்ற வீரர்களையும் கடந்து சேர நாடு செல்வதோ, தப்புவதோ இனி கனவில் கூட இயலாது என்பதை உணர்ந்து கொண்ட மார்த்தாண்டன் புத்திக்கு, விக்கிரமன் தங்களை வடமேற்கில் இழுத்ததன் காரணமும் எட்டியது.

அவன் திகைத்து நின்ற சில நொடிகளுக்குள் பின்னால் தொடர்ந்து வந்து கொண்டிருந்த மாறவர்மனும் பாண்டிய வீரர்களும் அதே இடத்தையடைந்தனர். எதிரில் நிற்பது சோழர் படை என்பதைப் புரிந்து கொண்ட பாண்டிய வீரர்கள் வாளை உருவிக் கொண்டு பாய்ந்து விட்டனர்.

அரை ஜாம நேரமே நடந்த அந்தச் சிறு போர் முடிந்த போது மாறவர்மன் கையிலிருந்த வாள் பறிக்கப்பட்டு, சோழ வீரர்களால் சிறைசெய்யப்பட்டிருந்தான். மடிந்தவர்கள் போக எஞ்சிய பாண்டிய வீரர்களையும் சிறை செய்த அரையன், அவர்களிடையே மார்த்தாண்டன் இல்லாததைக் கண்டு சற்று திகைத்தான்.

சிறை செய்யப்பட்டவர்களைப் படைத் தலைவரிடம் ஒப்படைக்குமாறு தன் வீரர்களுக்கு உத்தரவிட்டு விட்டு வனப்பகுதியில் புரவியொன்றின் குளம்பொலியைத் தொடர்ந்து தன் புரவியைச் செலுத்தினான்.

(தொடரும்)

---

"உங்க கோர்ட்டுல வெடிகுண்டு வெச்சிருக்கிறதா ஃபோன் மிரட்டல் வந்துச்சே... அப்புறம் என் ஆச்சு....?"

"அந்த வெடிகுண்டுப் பேர்வழி சுத்த ஞாபகமறதி ஆசாமி போலிருக்கு. திரும்பவும் ஃபோன் பண்ணி, கலெக்டர் ஆபிஸ்லதான் குண்டு வெச் சிருக்கோம். தவறுதலா உங்களுக்குத் தகவல் தந்துட்டோம்னு வருத்தம் தெரிவிச்சுட்டான்....!"

- கராகுளம் ஜெயாபாரதிப்ரியா.





"என்ன இது குழாயடியில் ஏதேதோ விளம்பர பேனர்கள் எல்லாம் வெச்சிருக்காங்க?"

"குழாயடிச் சண்டையை அந்தக் கம்பெனிகள்தான் ஸ்பான்ஸர் செய்யறாங்களாம்!"

- குடியாத்தம் ஆர். ஹரிகோபி.

◆ குழந்தைகள் வளர்ப்பில் மிக முக்கியமாகக் கருதப்பட்டு வரும் குழந்தைகள் கைசூப்பும் பழக்கத்தினை தத்தம் குழந்தைகளிடமிருந்து விரட்டியடிக்க வழி தெரியாது தத்தளித்துக் கொண்டிருக்கும் ஆயிரக்கணக்கானு பெற்றோர்களுக்கு, நல்லதொரு ஆலோசனைப் பெட்டகத்தினை வாரி வழங்கியிருந்தது 'இந்தப் பாப்பா செய்வது தப்பா?' என்ற கவர் ஸ்டோரி.

தோட்டக்குறிச்சி, இரா. வளையாபதி.

◆ அட்டைப்படப் பாப்பா (பையன்)வின் அழகான போஸும், முகமும் எங்களை மிகவும் கவர்ந்து விட்டதால், அக் குழந்தைக்கு முதலில் திருஷ்டி கழிக்க ஏற்பாடு செய்யுங்கள். 'பளிச்' சென்று படம்பிடித்த கோபிநாத்துக்கு எனது பாராட்டுக்கள்.

மணக்காடு, கி. ரஜினிஅருள்.

◆ 'பயங்கரவாதத்துக்குப் பணிந்து போவதா?' தலையங்கம், ஒவ்வொரு இந்தியக் குடிமகனின் எண்ணத்தையும் பிரதிபலித்தத்தோடல்லாமல், நமது அரசு செய்ய வேண்டியதையும் சப்தம் போட்டுக் கூறியிருந்தது. பாராட்டுக்கள்.

மொரட்டுப்பாளையம், இராஜேஸ்வரன்.

◆ "நாங்கள் கொடுமைகளில் இறங்க மாட்டோம். வெறுப்பினால் எங்களை நாங்கள் தாழ்த்திக் கொள்ள மாட்டோம். யாராவது வெறுத்தாலும் அவர்களிடம் அன்பாகத்தான் இருப்போம்" என மார்டின் லூதர் கிங் தீக்ரோக்களின் சார்பாக முழங்கியது போல், பயங்கரவாதிகளை ஆதரிக்கும் எண்ணத்தை விட்டொழித்து, பாகிஸ்தானிலும் தேச நல்லிணக் கத்திற்கு ஏன் பேனசிரே முன்வரக் கூடாது என்கிற கனவுதான் தங்களின் தலையங்கத்தைப் படித்தவுடன் எழுகிறது.

திருப்பாலை, பழ. பூங்குழலி.

◆ விளையாட்டுத் துறையில் நம்பிக்கை நட்சத்திரமாக உதிக்கின்ற இளம் விளையாட்டு வீராங்கனைகள் ஹேமலதா, வனிதா போன்றோரின் வளர்ச்சிக்குக் கல் லூரி எந்த அளவிற்கு ஊக்குவிக்கிறதோ அந்த அளவில் பாதியாவது பெரும் பணக்காரர்களும் சமூகநல அமைப்புக்கள் போன்றவையும் திறமையுள்ளவர்களை முன்னுக்குக் கொண்டு வரப் பாடுபட வேண்டும்.

தோழகிரிப்பட்டி, ஆர். முத்துக்குமரன்.

# 'பிடிவாதம்' பிடிப்பதேன்?



◆ அலைகள் தாலாட்டும் அற்புதத் தீவுகள்' பற்றிய கட்டுரையைப் படித்ததும் அந்தத் தீவுகளில் உலா வந்தது போன்ற ஒரு உணர்வைப் பெற்றேன்.

திருச்சி - 17, மு. இரவீந்திரன்.

◆ 'அலைகள் தாலாட்டும் அற்புதத் தீவுகள்' என்ற கட்டுரை அற்புதம்! மினிகாய் தீவில் மனைவியின் குடும்பப் பெயரைத்தான் கணவன் தன் பெயரோடு இணைத்துக் கொள்ள வேண்டும் என்பது மிகவும் ஆச்சரியமாக இருக்கின்றது. பெண்களையும் மதிக்கும் விதத்தில் ஒரு தீவு இருக்கின்றது என்பதை நினைத்துப் பெருமையாக இருக்கிறது.

புதுவை - 4, வே. பார்த்தசாரதி.

◆ 'இடைவெளி' சிறுகதையில், "பெண் பொறுமையோடும், சகிப்புத் தன்மையோடும் காலங்காலமாய்க் கட்டிக் காத்து வந்த குடும்பத்தை ஆண்கள் சில விநாடிகளில் சீரழித்து விடுகிறார்கள்" என்ற வரிகள் எல்லாக் காலத்துக்கும் பொருந்தும் தத்துவார்த்துவமாகும்.

கடையல், அன்பின் செபா.

◆ 'பூ முகம்' சிறுகதை இதயத்தை இளகச் செய்த சிறந்த சிறுகதை. தீபிகா என்ற அச் சிறுமி கற்பனைதான் என்றாலும் அவள் இறப்பு கண்ணீரை வரவழைத்து விட்டது. பாராட்டுக்கள்.

மேட்டுமகாதானபுரம், எம். சந்திரசேகர்.

◆ இந்தி திணிப்பைக் கண்மூடித்தனமாக எதிர்க்கும் தமிழ்நாட்டில் ஜுனூன் இந்தித் தொடர், தமிழக மக்களின் ஒட்டுமொத்த ஆதரவைப் பெற்று பீடுநடை போட்டுக் கொண்டிருப்பதை இந்தியாவின் இன்னொரு உலக அதிசயம் என்றே சொல்லலாம். ஆக, நல்லது எங்கிருந்தாலும் வரவேற்கும் நம் மக்களின் மனோநிலையைப் பாராட்டித்தான் ஆக வேண்டும்.

வேலாயுதம்பாளையம், எம். குணசேகரன்.

◆ 'ஜுனூன்' போல ஒரு சமூகத் தொடரைத் தயாரிக்க தமிழ்நாட்டில் யாரும் முன்வராமல் 'பிடிவாதம்' பிடிக்கிறார்களே! ஏன்?

பம்மல், வி.ச. அமிர்தவல்லி.



"செளரி.. சோறு துன்ன வேணாமா. மூணு மணி ஆயிடுச்சே..."

சாமிவேல் பாண்டியனின் கேள்விக்கு செளரி இரண்டு தடவை தலையாட்டினான்.

"வாயைத் தொறந்துதான் சொல்லேன்."

செளரி பார்த்துக் கொண்டிருந்த கடன் பத்திரத்தை மடித்து, கவரில் திரும்ப வைத்தான். பதினேழு பேர் மாடு வாங்கி இருக்கிறார்கள். கனகச்சிதமாக இந்தியில் எழுதியதன் மேல் உக்ரமாகக் கைரேகை புரட்டியிருக்கிறார்கள். இரும்புப் பெட்டி நிறைய இன்னும் கைரேகைகள். நாளைக்குள் எல்லாம் பார்த்து முடித்து ஏறக்கட்டி விட்டு அடுத்த கிளைக்குத் தாவ வேண்டும்....

"மிஸ்டர் குப்தா..." பாண்டியன் தேடினார்.

பிராஞ்ச் மானேஜர் குப்தா பாத்ரூமில். நாற்காலியில் சட்டையைக் கழற்றி மாட்டியிருப்பது கண்ணில் பட்டது.

"என்ன ஆளுப்பா... சென்ட்ரல் ஆபீஸ்லேர்ந்து வந்தாலும் ஒரு பய மதிக்க மாட்டேங்கிறான்..."

வங்கிக்கு ஆயிரத்துக்கு மேல் கிளை. உ.பியிலும், ம.பியிலும் கிராமம் கிராமமாகக் கிளைகளைப் பார்த்து, வரவு செலவைத் துருவி, அறிக்கை தயாரித்து தலைமை அலுவலகத்துக்குச் சமர்ப்பிக்கிற அதிகாரி சாமிவேல் பாண்டியன். கூட வருகிற இன்ஸ்பெக்ஷன் கிளார்க் செளரி....

குப்தா. 'இந்த இரண்டு பிள்ளைப் பூச்சிகளும் எப்படா போவாங்க' என்று எதிர்பார்க்கிற பிராஞ்ச் மானேஜர்.

"சீக்கிரம் வாப்பா..." வாசலில் நின்று கூப்பிடுகிற பிள்ளைப் பூச்சி, அடுத்த வருடம் ரிடையராகப் போகிறது. அப்புறம் தஞ்சாவூரில் காரை வீடு இருக்கிறது. மூட்டுப்பிடிப்பு தைலம் தேய்த்துவிட மனைவி... ரெண்டரை ஏக்கர் நஞ்சை....

செளரி வயதும் பாண்டியன் சர்வீஸும் ஒன்று. பிரம்மச்சாரிக் கட்டை.

கட்டைக்குப் புரமோஷன் கிடைத்தால் தான் கல்யாணம்.

"செ ள ரி... ஜுவல் பாக்கெட் எட்டு நூத்து முப்பத்தஞ்சா முப்பத்தாறா...

வெளியே காக்கை இல்லை.

"மு ப் ப த் தே ழு சார்..."

இந்த ஊரில் மொத்தம் நூறுபேர் தேறுவார்களா என்று செளரிக்குத் தெரியவில்லை. நகைக்கடன் வாங்கியது யாரெல்லாம்?

"ஓட்டல் மாதிரி ஒண்ணும் கண்ணுலே படலியே செளரி..."

"தெரு திரும்பினா ஒரு பைவ் ஸ்டார் ஓட்டல் இருக்கு சார். வாழை இலையிலே நெய்விட்டுச் சாப்பாடு போடறானாம்..."

தெருவே இல்லை. நடந்து நடந்து சமப்பட்ட பாதை.

# இரா.முருகன்

"ஏம்ப்பா... சாப்ட்டு வந்து அந்த பம்ப் செட் லோன்...."

டபடபவென்று பின்னால் பெரிய இரைச்சலோடு எதுவோ விழுகிற சத்தம். செளரி திரும்பிப் பார்த்தான்.

"சார்.. குப்தாஜி ஷட்டரை இறக்கிட்டார். அந்த மகேஸ்வரனே வந்தாக்கூட இனிமே உள்ளே போக முடியாது. நாளைக்குத்தான்."

"ஏம்ப்பா... உள்ளாற என் பெட்டிப்பா... குப்தா... குப்தாஜி."

மோட்டார் சைக்கிள் சப்தம். பொட்டலுக்கு நடுவே குப்தாஜி போகிறார். ஊர் அந்தப் பக்கமாக இருக்கிறதா? அப்போ இந்தப் பக்கம்....?

"சார் இது என்ன இமயமலை போற பாதையா....?"

பாண்டியன் பதில் சொல்ல வாய் திறப்பதற்குள், பின்னாலிருந்து கூட்டமாக ஓடி வந்து கடந்து போனார்கள்.

"ஷேர்... ஷேர்..."

எல்லாரும் பிரம்மாண்டமான முண்டாக கட்டி, மிஞ்சியதைக் கொஞ்சம் போல இடுப்பில் சுற்றி, தொளக்கான் ஜிப்பாவோடு ஓடுகிறவர்கள்.

"பாகோ... பாகோ... ஷேர்.. ஷேர்..."

என்ன எழவு.. ஷேர்னா? ஐயோ புலியா... எங்கய்யா ஷேர்?

**மா**டியோடு கட்டிய வீடு. தானே இடித் தது. மாடிக்கும் கடைசிப் படிக்கும் நடுவே அரையடி இடைவெளி.

சாமிவேல் பாண்டியனை மூட்டை போல தள்ளிவிட்டு, சௌரியும் உள்ளே குதித்தான்.

''என்னப்பா.. என்னப்பா...?''

''புரியலையா? புலி ஸார்!''

எங்கோ எருமைமாடு தொடர்ந்து கத்துகிறது. உச்சத்தில் முழங்குகிற பறைக் கொட்டு. ஆணும் பெண்ணுமாக ஹோவென்று அலறுகிற சப்தம்....

''ஐயோ! ஆளைத் துன்னுடுமா...? வேணாம்ப்பா..''

''இன்னாதேன்னு சொல்லிட்டு வரட்டுமா சார்...? இம்மே போகட்டா.''

''தனியா விட்டுட்டா...? போக தப்பா.... சௌரி...''

''ஏன் சார் பயந்து சாக றீங்க...மாடிக்கெல்லாம் புலி வராது... மரக்கதவை வேணா சாத்திடலாம்...''

''ராப்பூறா பயந்துகிட்டு இங்கே தங்கணுமாப்பா....? பசிக்குதே...!''

''பரவாயில்லே சார்... உயிரோட இருந்தா நாளைக்குச் சேர்த்துவச்சுச் சாப்பிட்டுக்கலாம்....''

சாமிவேல் பாண்டியனின் கண்கள் பயத்தோடு வாசலைப் பார்த்துக் கொண்டே இருக்க, சரசரவென்று சாயங்காலம் நகர்ந்து, இருட்டு மெல்ல நுழைந்தது.

சௌரி ரேடியம் டயல் கடியாரத்தில் நேரம் பார்த்தான். பத்து பத்து. வெளிச்சம் வர இன்னும் ஏழெட்டு மணி நேரம். கிராமம் தூங்கியாகி விட்டது போல நிசப்தம். 'என்ன சமாசாரம்' என்று தொண தொணத்துக் கொண்டிருந்த நாய்களும், 'சொல்லாட்டாப் போய்யா' என்று சுருண்டு விட்டன.

''சௌரி ஏதாச்சும் பேசுப்பா...''

''என்ன பேசறது சார்?''

''ஜூவெல் பாக்கெட் நிச்சயமா எட்நூத்து முப்பத்தேழுங்கறியா... பேலன்ஸ் புக்கோட டிக் அடிச்சுடலாமா எதுக்கும்....''

''இது பேசறதுக்குப் பேசாமலே இருக்கலாம் சார்....''

''இல்லப்பா.. திடீர்னு சந்தேகம்... நாளைக்கு 'என்னய்யா கன்னை முழங்காலிலே வச்சுட்டிருந்தியான்னு கேப்பாங்களே...''

இம்மே ஏதோ சரிந்தது. கட்டை உருளுகிற சத்தம். யாரோ நடக்கிற மாதிரி....

''பிசாசாப்பா....''

''புலியா இருக்கும் சார்.''

''மேலே வந்துடுமா?''

''கதவைச் சாத்திட்டேன். இருட்டிலே படி தெரியாது சார்...''



''என்னமோ தனியா மாட்டலை. கூட நீயும் இருக்கியேன்னு கொஞ்சம் தைரியமா இருக்கு. இல்லே இப்படியே மாரைப் பிடிக்கக்கிட்டுச் சரிஞ்சிருப்பேன்... பயமா இருக்குப்பா... நமக்கு ஒண்ணும் ஆயி டாதே?''

''ஆகாது சார். ரிடையர் ஆறதுக்குள்ளே இன்னும் நூறு பிராஞ்சிலேயாவது லட்சத் துச் சில்லறை தடவை ஜுவெல் பாக்கெட் எண்ணப் போறீங்க.. என்னையும் இரும் பவும் என்னை வைப்பீங்க...''

''என்னப்பா பண்றது. ட்யூட்டியாச்சே? பிள்ளை குட்டிக்காரன். ஜாக்ரதையா இருக் கணும். ரிடையராவதும் பி.எப்பைக் கொடுக்காம இழுத்தடிச்சா என்ன பண்றது....?''

''சார் சின்னதா ஒரு பத்து நிமிஷம் தூக்கம் போட்டு எழுந்திருக்கட்டா?''

''ஐயையோ.. தூங்கிடாதே. நான் ஏதாக்கம் பேசறேன். டெல்லி பகட்கஞ்ச் பிராஞ்ச்லே மிட்டல்னு ஒரு மானேஜர். கடல்லே மீன் பிடிக்க டிராலர் வாங்க லோன் தரதுக்கு... சரி சரி... ஆபீஸ் அக்கப் போர் வேணாம்பே... எனக்குத் தெரிஞ்சது அது ஒண்ணுதான்...''

ஒரு ஐந்து நிமிடம் போல மௌனம். கவர்க்கோழி சாதகம் செய்கிற ஷெனாய் வித்வான் போல விடாமல் இரைகிறது.

யாரோ, எதுவோ தடதடவென்று படி ஏறுகிற சத்தம்.

''சௌரி....''

தொப்பென்று இரும்பவும் குதித்து மறைகிறது.

''பக்கத்துலே எங்கேயோ குழந்தை அழுறமாதிரி கேக்குதே சௌரி...''

''பூனைக் குட்டியா இருக்கும் சார்....''

''ஊருக்குள்ளே இன்னுமா சுத்திட் டிருக்கும் அந்தப் புலி?''



''எறங்கிப் போயிடலாங்கறீங்களா?''

''ஐயையோ நீ வேறே... பட்டப்பகல் லேயே இங்கே பாதை தெரியலை. இப்ப அல்வா மாதிரி புலி வாய்லே மாட்டிக் கிட்டா?''

''கல்யாபின்னான்னு பசிக்குதுன்னீங் களே.. எப்படி இருக்கு சார் இப்ப?''

''மொப்புனு இருக்குப்பா... கால் பார்ம் ஆயிடுக்க போல... ஏன் கேக்கறே திடீர்னு?''

''எனக்குப் பசிக்குது சார்....''

''காலையிலே சல்வால் பஸ் ஸ்டாண்ட்லே ஒரு பாக்கெட் பிஸ்கட் வாங்கி கைப் பையிலே வச்சியே.... இதானே பை....''

''சார் சார்.... பையிலே பர்ஸும் கர்ச் சீப்பும்தான் இருக்கு.... மக்கின வாடை வந்ததுன்னு பிஸ்கட்டை பஸ்ஸிலேயே விட்டுட்டேன்.''

''இருந்தா இப்பப் பிரயோஜனப்படு மில்லே?''

உலகில் பேச வேறு விஷயம் அஸ்த மித்துப் போனதுபோல் மௌனம்.

''சௌரி ஏதோ கெட்ட வாடை வரல்லே?''

''மூக்கு அடைச்சுக்கிச்சு சார்....''

''என்னப்பா... விளையாடறியா. நல்லா கவனி.. ஏதோ காட்டு ஜந்து...''

''உங்களுக்கு எப்படி சார் தெரியும் காட்டுப் பிராணி, வீட்டுப் பிராணின்னு.''

''மனுஷனுக்கு வாடை இருக்கும் போது, சிங்கம் புலிக்கு வாடை இருக்காதா என்ன. ஏம்ப்பா.... கீழே இருட்டிலே ஏதோ பல்ப் போட்ட மாதிரி மின்னலே?''

''சார். உங்களுக்குத் தூக்கக் கலக்கம். உள்ளங்கையே தெரியாத இருட்டு... கீழே ஊசி கிடக்கா உலக்கை கிடக்கான்னு தெரியு தாக்கும்.''

''கெட்ட வாடைப்பா.. இது.... இது... புலி வாடைதான்.'' அவர் குரல் உதறியது.

''கம்மா இருங்க சார்.'' சௌரிக்கும் லேசாக பயம்.

''கதவு சாத்தியிருக்கான்னு இன்னொரு வாட்டி பார்த்துடேன்.''

''அது மேலேதான் சாஞ்சு இருக்கேன் சார்.''

''மிருகக் காட்சி சாலையிலே புலிக் கூண்டு கிட்டே போனா இதே வாடைதான் வரும்.''

''இங்கதான் இருக்குங்கறீங்களா சார்?'' சௌரி கால் தூக்கத்தில் கேட்டான்.

''சௌரி தூங்கிட்டியா?.... புலிவேசம் பார்த்திருக்கியா சௌரி?''

''இப்ப ஏன் சார் அதெல்லாம்?''

''இன்னும் மூணு மணி நேரமோ

"தலைவர் ஏன் பொதுக் குழுவைக் 'கூட்ட' முடியாதுன்னு சொல்றார்?"

"அவருக்கு 'டஸ்ட்' அலர்ஜி யாம்!"

- ஞா. ஞானமுத்து.





"நாடாளுமன்றக் கூட்டத்திற்குப் போகும் எம்.பியை வாழ்த்தித் துண்டு போடாமல் ஸ்வெட்டர் தருகிறீர்களே ஏன்?"

"அவர் போறது குளிர்காலக் கூட்டத் தொடருக்காச்சே!"

- பி.எல். சந்தானகிருஷ்ணன்.

சொச்சமோ இங்கே கெடந்து அல்லா டணும்... தூங்கிடக் கூடாது பாரு...."

"சார் எனக்குக் கூட வாடை தட்டுப் படுது சார். பக்கத்துலே எங்கியோ... நீங்க சொல்ற மாதிரி... புலிவாடை இதானா? என்ன எழவோ... மேலே வராம இருந்தாச் சரி. சார்... நீங்களும் கதவுலே சாஞ்சுக் கங்க... கூடுதலா பாதுகாப்பு..."

"சௌரி, புலிவேசம்னு சொன் னேனே... எங்க ஊர்லே வேசம் கட்டுற நாயக்கர் ஒருத்தர் இருந்தார்... திடீர்னு மூளை இடக்கு பண்ணி... என்ன சொல்ல... மனுசன் தன்னையே புலின்னு நினைச் சுக்கிட்டு, குளிக்கறது இல்லே... பல்லு வெளக்குறது இல்லே... பச்சை மாமிசம் எங்கேன்னு தேடித் தின்னுக்கிட்டு..."

சரசரவென்று ஏதோ இருட்டில் ஊர் கிறது.

"என்னப்பா...."

"எலி மாதிரி ஏதோ சார்..." சௌரி காலை மடக்கி உட்கார்ந்தான்.

"சௌரி... நான் சொன்னா நம்ப மாட்டே.... அந்த புலிவேசக்காரர் அப்புறம் எப்ப நடந்து போனாலும் குப்புனு இதே வாடை..."

சௌரிக்கு அந்த வாடை நாசித்துவாரங் களில் பலமாகத் தாக்கி, உள்ளே புகுந்து தலைக்குள் கவிகிற பிரமை. அதைத் தவிர வேறு எதுவும் நிஜமில்லை... அவன் களைப்பும் தூக்கமுமாக ஏதோ உலகத்தில் ஆழ்ந்து கொண்டிருக்க, பாண்டியன் பச்சை இறைச்சியைக் கடித்துக் கொண்டு உடம்பு முழுக்க வரிவரியாக வர்ணக் கோடுகளோடு போகிற தோற்றம்... இடுப்பில் பொடி மட்டையோடு அலைகிற புலி...

"தூங்கிடாதே சௌரி... புலிவேசக்கார நாயக்கர் இறந்த போது...."

தூங்கிப் போனான்.

"சௌரி...எழுந்திருப்பா... இளம் பிள்ளை ஏதாச்சும் பண்ணு, பழம்னு கிடச்சா தின்னுட்டு. ஆபீஸ்லே குளிச்சுட்டு... வேலையை ஆரம்பிக்க.. மாசக் கடைசிக் குள்ளே இன்னும் ஏழு பிராஞ்ச் டூர் இருக்கு.... முடிக்காட்டி டி.ஜி.எம் காஞ்சுடு வார். முதக்காரியமா எத்தினி ஜூவல் பாக் கெட்டுனு...."

சௌரி மாடியிலிருந்து கீழே வந்தான். எருக்கஞ் செடி முளைத்துக் கிடந்த தரையில் வௌவாலோ ஏதோ செத்துக் கிடந்தது.

"நானும் உறங்கிட்டேன் உன்னைச் சொல்லிட்டு...."

பாண்டியன் கண்ணாடியைத் துடைத் துப் போட்டுக் கொண்டு நடக்க, நாலைந்து பேர் வழிமறித்தார்கள்.

"இங்கேயா ராத்திரி தங்கினீர்கள்?"

அரைகுறையாகப் புரிந்த இந்தி. பாதி அபிநயத்தில் சௌரி பதில் சொன்னான் :

"புலி வந்ததே!"

"அதான் ராத்திரி ஏழு மணிக்கே தண் டோரா போட்டோமே.. .பக்கத்து கிராமத் துலே இருந்து வந்த தகவல் சரியில் லைன்னு... யாரோ கிளப்பி விட்டு.. என்னத்தைப் பாத்தாங்களோ... இந்தப் பக்கம் புலி நடமாடி எத்தனையோ வருஷ மாச்சு...."

சௌரி, பாண்டியன் முகத்தைப் பார்த் தான்.

"அது சரி, தங்கறதுக்கு வேறே எடம் கிடைக்கலியா, உங்களுக்கு? பட்டணத்துக் காரங்க... இல்லாட்டா வாடையே உஷார்ப் படுத்தியிருக்குமே!

"நாங்க ராத்திரில வரவே பயப்படும் இந்த இடத்தில ஒரு இராப் பூரா தங்கியிருந்திருக்கீங்களே. ஆனாலும் நீங்க தைரியசாலிதான்!"

சௌரியும் பாண்டியனும் ஏக காலத் தில் திரும்பிப் பார்க்க, அந்தக் கட்டடத்தின் பின்னால் பெரிய ஏரியாக விரிகிற தண்ணீர். சுற்றிலும் கரையில் தாழைப் புதர்களுக் கிடையில் ஏகப்பட்ட புற்றுகள். அவர்கள் திகைப்பை அதிகமாக்கப் பாம்பு உரித்துப் போட்ட நீளச் சருகுச் சட்டை ஒன்று காற் றில் புரண்டு வந்து சௌரியின் கால்களை அணைத்தது.

## நீங்கள் கேட்டவை
### - தராசு

● பாக்கியமுத்து. திருச்சி.

*? சுவடாவிலிருந்து வெளிவரும் விடுதலைப் புலிகளின் உலகத் தமிழர் நாளில் வை.கோ.வைப் புகழ்ந்து எழுதியுள்ளது குறித்து?*

! தி.மு.க.வில் பிளவை உண்டாக்கும் எண்ணத்தில் அளவுக்கு அதிகமாக வை. கோ.வைத் தங்களுக்கு நெருங்கியவர் என்று காட்டிக் கொள்வதன் மூலம், புலிகள் வை. கோ.வுக்கு நன்மை செய்யவில்லை. அது சாணக்கியமும் ஆகாது. இங்கே தடாபுடா வெல்லாம் இருக்கிறது என்பதை மறக்கலாமா? பிள்ளையார் பிடிக்கப் போய் குரங்காய் முடிந்த கதையாகி விடலாம்!

● ஆர். ஏ. ரவி, தக்கோலம்.

*? வங்க வைர விழா கிரிக்கெட் போட்டியை ஒளிபரப்பும் பணியை வெளிநாட்டு நிறுவனத்துக்கு வழங்கலாமா?*

! வங்க கிரிக்கெட் அசோசியேஷனை மட்டும் இதற்குக் குறைகூறிப் பயனில்லை. தூர்தர்ஷனின் மெத்தனமும் ஒரு காரணம். அது சரி மிஸ்டர் ரவி இந்த ஒரு கேள்வியையே நீங்க மூணு டஜன் போஸ்ட் கார்டில் எழுதி எதற்கு வீணடிக்கிறீங்க? மந்திரிங்கதான் வீண் விரயம் செய்யறாங்க. நாமாவது சிக்கனமா சமர்த்தா இருப்போமே!

● செ. கற்குவேல், வி. வேடப்பட்டி. ❐

*? வை.கோ. மீது நடவடிக்கை எடுக்கக் கலைஞர் பயப்படுவது ஏன்?*

! அவசரப்பட்டால் கட்சி மையத்தில் பிளக்கும். அப்படி பிளந்தால், கட்சி சொத்தில் பாத்தியதை கொண்டாடுவார்கள் - 'வை. கோ. பிரிவுதான் அசல் தி.மு.க.' என்று வாதாடி. அதனால் பையப் பைய வை. கோ.வின் ஆக்ரோஷத்தைக் கிளப்பி, பேச விட்டு பேச விட்டு காலி டப்பா என்ற இமேஜை உருவாக்கி, ஆதரவு தேய வைத்து, வெளியேற்றும் போது மிகக் குறைந்த ஆதரவே அவருக்கு இருக்குமாறு கவனித்துக் கொண்டு... இதிலெல்லாம் உள்ளர்த்தம் ரொம்ப இருக்கு வாத்யாரே!

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

*? "காஷ்மீர் பிரச்னைக்குப் பேச்சு வார்த்தை மூலம் உடனடித் தீர்வு காணாவிடில் மற்றொரு இந்தியா - பாகிஸ்தான் போர் ஏற்படும்" என்ற டாக்டர் கரண்சிங்கின் எச்சரிக்கை பற்றி...?*

! மத்யஸ்தம் செய்ய வந்த தமது பேச்சை யாரும் கேட்கவில்லை என்ற கடுப்பில் பேசியிருக்கலாம். போர் மூளும் அளவுக்கு நிலைமையை முற்ற விட இருதரப்புமே விரும்ப மாட்டார்கள் என்றுதான் தோன்றுகிறது. இரு நாடுகளின் பொருளாதாரமுமே டமாலாகி விடும்.

● லலிதா, சென்னை.

*? மழை பெய்யும் அழகு குறித்து?*

! நாலு திக்கிலும் இருள் மேகங்கள் திரண்டு வர திடுமென வெள்ளிக் கம்பிகள் பொழிவது ஆனந்த ரசனைதான். ஆனால் ஒரே நாளில் நகரின் சாலைகள் அறுக்கப்பட்டு குண்டும் குழியுமாகி, தெருவெல்லாம்



* நடவடிக்கை எடுக்க...

## வை.கோ. மீது நடவடிக்கை எடுக்கத் தாமதம் ஏன்?



* ...தயக்கம் ஏன்?

குளமாகத் தண்ணீர் தேங்கி, கீழே இருப்பது தெரியாததால் வாகனங்களுக்கும் பாதசாரிகளுக்கும் விபத்துக் கண்ணிகளாக மாறும் போது அழகாகவா இருக்கிறது? சென்னையில் மழை பெய்தாலும் கஷ்டம்; பெய்யாவிட்டாலும் கஷ்டம், போதுமடா சாமி!

● த. குணசேகரன்,
கவுந்தப்பாடி.

*? "தானாகவே வளரும் தலைவர் வை.கோ." என்று தாஞ்சியார் கூறுகிறாரே?*

! எங்கே? புலிகள் ஒரு பக்கம் அவரை "வளர்க்க", கலைஞர் இன்னொரு பக்கம் "வளர்க்க", தொண்டர்கள் முகஸ்துதி செய்து "வளர்க்க", தாஞ்சியார் வேறு உருவி விட்டு "வளர்க்க"ப் பார்க்கிறார். இந்த லட்சணத்தில் தன்னால் வளர்வதாவது!

● சா. ரமேஷ்பாபு, லால்குடி.

*? தீபாவளி என்றதும் நினைவு வருவது?*

! பாமாயில் இறக்குமதியில் நடந்த குளறுபடியால் இவ்வாண்டு தீபாவளிக்கு பாமாயில் கிடைக்காமல் போவது ஒருபுறமிருக்க, அரசு நிறுவனமான எஸ்.டி.ஸி. அந்தக் கோளாறுக்குக் காரணமானதில் மக்களின் வரிப்பணம் கோடிக்கணக்கில் நஷ்டம். 30,000 டன் பாமாயிலை டெண்டர் கோராமல் இறக்குமதி செய்ததில் மார்க்கெட் விலைக்குக் கூடுதல் விலை தந்திருக்கிறது. அப்படி வாங்கிய பாமாயிலில் சென்னைக்கு வந்த 6,000 டன் நச்சுத்தன்மை மிகுந்திருப்பதால் விநியோகத்துக்கு லாயக்கில்லை என்று தீர்மானமாகி விட்டது! வினைல் குளோரைட் என்ற ராசாயனப் பொருள் சுமந்து வந்த கப்பலையே பாமாயில் ஏற்றி வரவும் பயன்படுத்தியதால் ஏற்பட்ட அவலம் இது.

● எம்.கே. சக்திவேல், சேலம்.

*? விகடன் தீபாவளி மலர் 208 பக்கத்தில் 102 பக்கம் விளம்பரம்; 192 பக்க குமுதத்தில் 86 பக்கம் விளம்பரம். அவ்வாறு இருக்க, இரண்டு புத்தகங்கள் என்பது வாசகர்களை ஏமாற்றுவதாகாதா?*

! சரியாப் போச்சு! விளம்பரங்கள் இருப்பதால்தானே இரட்டைப் புத்தகங்கள் தர முடிகிறது! அதே விலைக்கு நூற்றுக்கு மேற்பட்ட பக்கங்கள் படிக்கக் கிடைக்கிறதே என்றல்லவா பார்க்க வேணும்! விளம்பரங்கள் இல்லை என்றால் பத்திரிகைகள் விலை இரு மடங்கு அல்லது அதற்கும் மேலும் ஆகும் சுவாமி!

● ...கு வளர்க்கிறார்!



● கடுப்பில் பேசியது!



● சி. ஆர். நாகராஜன்,
பொள்ளாச்சி.

*? அரசியல் தலைவர்களுக்கு, வீரவாள், கேடயம் போன்றவை பரிசளிக்கிறார்களே எதற்கு?*

! எதிர்க்கட்சியை, அல்லது கட்சிக்குள் எதிரியைத் தாக்க வாள்; எதிரிகளின் தாக்குதலிலிருந்து தற்காத்துக் கொள்ளக் கேடயம். எல்லாம் சிம்பாலிக்காகத்தான். பின்னே பழங்காலம் மாதிரி யுத்தமா நடத்த முடியும்? சொற்போர்தான்!

● சி. கண்ணன், கட்டமராபாளையம்.

*? காஷ்மீர் பிரச்னையில் அமெரிக்க தலையிட்டு, காஷ்மீர் இந்தியாவைச் சேர்ந்ததல்ல என்று கூறியுள்ளதே?*

! என்ன செய்வது, வியட்நாம் தொடங்கி போஸ்னியா, சோமாலியா வரை பல இடங்களிலும் உதை வாங்கியும் கூட "உலகின் பாதுகாவலன் நான்தான்" என்ற கர்வம் போக மாட்டேனென்கிறது அதற்கு!

● கி. இந்தியன், சென்னை.

*? இந்தியாவில் ராணுவ ஆட்சி அமைய வேண்டும். என் ஆசை நிறைவேறுமா?*

! வேண்டாம் இந்த விபரீத ஆசை. அது நிறைவேறுவதற்கான வாய்ப்பு இங்கு குறைவு என்பது ஒருபுறமிருக்க, ராணுவ ஆட்சி ஒன்றும் நீங்கள் கற்பனை செய்வது போல் கற்பகத் தரு அல்ல. பயங்கரமான விஷத்துடன் கூடிய முட்புதர்தான்.

□ ரூ 25 பரிசு பெறுபவர் :
செ. சற்குவேல்,
வி. வேடப்பட்டி,
விளாத்திகுளம் வட்டம்,
சிதம்பரனார் (மாவ) - 627 907.

# மூழ்கித் தலை வைத்து

சுபா **17**

படகு மெல்ல மெல்ல, தன் நீர் மேல் வாழ்க்கையை முடித்துக் கொண்டிருந்ததைக் கண்டு கஸ்தூரிரங்கனுக்குக் கவலையாக இருந்தது. அவனுக்கு நீந்தத் தெரியும். கவிதாவிற்கு நீச்சல் தெரியாவிட்டாலும் அவனால் காப்பாற்ற முடியும். அவன் அதற்காகக் கவலைப்படவில்லை. படகு மூழ்கிக் கொண்டிருப்பதன் காரணத்தை நினைத்துத் தான் அவனுக்குக் கவலை. மயிரிழையில் தப்பிய உயிர்கள். அவன் அல்லது அவள் இருவரில் யாராவது ஒருவர் போயிருக்க வேண்டியது. திகிலுடன் கூடிய ஒரு பெருமூச்சு வெளிப்பட்டது.

இவர்கள் படகு மூழ்குவது அந்தச் சில வினாடிகளுக்குள் அந்தப் பிரதேசத்தில் பரவி, ஓர் இயந்திரப் படகு, அவர்கள் படகை நோக்கி விரைந்து வந்தது. படகுடன் படகு உரசுகிற மாதிரி இயந்திரப் படகோட்டி கொண்டு வந்து நிறுத்த, அதில் இருந்த இருவர் உதவிக் கரங்களை நீட்டினார்கள்.

''வா, கவிதா.''

கவிதா மயங்கியிருந்தாள். கஸ்தூரிரங்கன் அவளைத் தூக்கி அவர்களிடம் ஒப்படைத்து விட்டுத் தானும் அடுத்த படகிற்குத் தாவினான்.

இயந்திரப் படகில் இருந்தவர்கள் எக்கச்சக்கக் கேள்விகள் கேட்டார்கள். ஒரு துப்பாக்கி வெடித்தது என்பது அவர்களுக்கு ஆச்சரியமான செய்தியாக இருந்தது. கஸ்தூரிரங்கன் அவர்களின் கேள்விகளை ஒரு மாதிரி சமாளித்துக் கரையை அடைந்தவுடன், ''ஒரு ஃபோன் பண்ணணுமே'' என்றான்.

அந்த நர்ஸிங்ஹோமின் அறை ஐந்து நட்சத்திரத் தகுதி பெற்றிருந்தது. காலுக்குக் கீழே கம்பளம். சூழ்நிலையில் குளிர்காற்று. உறுத்தாத வெளிச்சம். கவிதா கட்டிலில் சீரான மூச்சுடன் படுத்திருந்தாள். பக்கத்தில் கவலையுடன் கஸ்தூரிரங்கன் நின்றிருந்தான். அவனுக்குப் பக்கத்தில் டிபார்ட்மெண்டல் ஸ்டோரின் மானேஜர் நின்றிருந்தார்.

''ரொம்ப கவலைப்படாதே ரங்கா. வெறும் மயக்கந்தான்னு டாக்டர் சொல்லிட்டாரில்ல. செடேடிவ் வேற. தூங்கறா. டிஸ்டர்ப் பண்ணாம வெளிய போய்ப் பேசுவோம் வா.''

வெளியே வந்தவன் திடுக்கிட்டான். காரணம் அன்றைக்கு டிபார்ட்மெண்டல் ஸ்டோரின் காஷியர் என்று அறிமுகப் படுத்தப்பட்ட மாலினி இப்போதும் வெளியே காத்திருந்தாள். பார்த்தவுடன் வசீகரிக்கும் உடலமைப்பு. கஸ்தூரிரங்கனைப் பார்த்தவுடன் இமைகளைப் படபடவென மூடித் திறந்து சிரித்தாள். கஸ்தூரிரங்கன் நாகரிகம் கருதிச் சிரித்தான்.

''பையன் ரொம்ப பயமுறுத்திட்டான் மாலினி'' என்று சொல்லிக் கொண்டே, தனக்குப் பின்னால் தானாக மூடிய கதவு தன் மேல் இடிக்காமல் இருக்க, சற்று வேகமாக வெளிப்பட்டார் மானேஜர்.

''என் நெலமை உங்களுக்குத் தெரியுமா?''

''மாலினி... நீ காருக்குப் போயேன். நான் பின்னாலேயே வந்துடறேன்.''

''பை'' என்று உதடுகளைக் குவித்து முத்த பாவனையுடன் அவனிடம் விடை பெற்றாள் மாலினி. அவள் அவன் ரத்தத்தில் அதிர்வுகளை ஏற்படுத்தினாள். கஸ்தூரிரங்கன் இயந்திரத்தனமாய்த் தலையசைத்தான். அவள் திரும்பி, ஒரு பெண்மைக்குரிய நளினத்துடன், சற்று அதிகப்படியான அழகான அசைவுகளுடன் நடப்பதைப் பார்த்தான்.

''இப்பல்லாம் நான் கார் ஓட்டறதில்ல. அதனாலதான் அவளைக் கூட்டிட்டு வந்தேன். நீ எனக்கு ஃபோன் பண்ணவுடனே நான் நம்ப பசங்களுக்குச் சொல்லிட்டேன் ரங்கா. அந்த மாருதியை மடக்கிட்டோம்.''

''ரொம்ப சந்தோஷம்.''

''சந்தோஷமேயில்லாம, சந்தோஷம்னா எப்படி ரங்கா?''

''உயிர் போயிருக்க வேண்டியது. என்னுதுன்னாக்கூட பரவால்லை. அவ உயிர் போயிருந்தா?'' கஸ்தூரிரங்கன் லேசாக உடல் நடுங்கினான்.

''அதான் பிடிச்சாச்சில்ல கண்ணா. நடந்ததைப் பத்திக் கவலைப்படாதே. இனிமே இப்படி நடக்காது. ஒன்னைப் பத்தின விஷயம் எதுவுமே இனிமே லீக் ஆகாம பாத்துக்கறேன். அவளுக்கு எதுவும் தெரியாம நடந்துக்க.''

''எழுந்த ஒடனே கேப்பா.''

''ஒனக்கா சமாளிக்கத் தெரியாது, ரங்கா? பரவால்லை, பொண்ணு நல்லாத்தான் இருக்கா.''

அவர் போய் விட்டார்.

சுகிதாவிற்கு மாலை நான்கு மணியளவில் விழிப்பு வந்து விட்டது. எழுந்து கொண்டவள் சூழ்நிலை கண்டு புரியாமல் குழப்பத்துடன் தன்னைச் சுற்றிப் பார்த்து, கருணையான கண்களுடன் அவளைப் பார்த்துக் கொண்டிருந்த கஸ்தூரிரங்கனைப் பார்த்ததும், அழுகை குமுற அவன் தோளில் சாய்ந்தாள். குலுங்கிய அவள் முதுகை ரங்கா வருடிக் கொடுத்தான்.

''என்ன ஆச்சு ரங்கா?'' என்றாள் விம்மல் சேர்ந்த வார்த்தைகளுடன்.

''ஒன்னும் ஆகலியே சுகிதா. படகு மூழ்கினதைப் பாத்துப் பயந்து மயக்கம் போட்டு விழுந்துட்டே. நான் உன்னைத் தூக்கி இன்னொரு படகுல படுக்க வச்சிக் கூட்டிட்டு வந்துட்டேன்.''

''இன்னொரு படகு ஏது?''

''பக்கத்தில போய்ட்டிருந்த ஒரு படகு வந்துதும்மா.''

''துப்பாக்கியால நம்மைச் சுட்டாங்க.''

''நம்மை இல்லே... படகுல போய்ட்டிருந்தப்ப, பக்கத்தில ஒரு மணல்மேடு மேல கொக்கெல்லாம் பாத்தோமே.''

''ஆமா.''

''அதைத்தான் சுட்ருக்காங்க! அவங்களே வந்து மன்னிப்புக் கேட்டுக்கிட்டாங்க. போலீஸ்ல சரண்டர் ஆயிட்டாங்க.''

''குண்டு உங்க மேல பட்டிருந்தா என்ன ஆயிருக்கும்?''

''ஒன்னும் ஆயிருக்காது. அது ஓடம்புல பட்டா ரத்தக் காயந்தான் ஆகுமே தவிர, ஒன்னும் ஆகாது சுகிதா. என் சுகிதாவுக்கு ரொம்ப சாஃப்ட் ஹார்ட் இல்லியா. அதான் என் செல்லக் குட்டிக்கு மயக்கம் வந்துடிச்சி.''

''இது என்ன இடம் ரங்கா?''

''நர்ஸிங்ஹோம்.''

''ரொம்ப காஸ்ட்லியா இருக்கும் போல இருக்கே ரங்கா?''

''ஸோ வாட்?''

''என்னால செலவுதானே?''

''சம்பாதிக்கறது எதுக்கு சுகிதா? சந்தோஷமா, வசதியா இருக்கணுங்கறதுக்காகத்



தானே?''

''ப்ச். இருந்தாலும்...''

''கல்யாணத்துக்கு முன்னாலேயே சிக்கனத்தைப் பத்தி யோசிக்க ஆரம்பிச்சிட்டியா? ஒனக்குப் பணத்தைப் பத்தி என்ன கவலை? உங்கப்பா சேத்து வச்சிருக்காரு. பத்தும் பத்தாததுக்கு நான் வேற சேத்து வச்சிருக்கேன்.''

''ஐயையோ.''

''என்ன ஐயையோ?''

''அப்பா தேடுவாரு ரங்கா. இப்ப நேரம் என்ன?''

''நாலு மணிதான் ஆவுது.''

''சாயங்காலம் நாலு மணியா?''

''ஆமா. நீ போலாம்னா போலாம்.''

''எங்க?''

''உங்க வீட்டுக்கு.''

''ம்ஹூஹூம். எவக்குப் பசிக்குது ரங்கா. நீங்க எங்கிட்ட என்ன சொன்னீங்க? இன்னிக்கு முழுக்க எங்கூட சுத்தறதாச் சொன்னீங்க. போட்டிங்தான் பாதியிலயே அம்பேல் ஆய்டிச்சி. குருவி, கொக்கு கூடற வனெல்லாம் நமக்கு வில்லன்களாப் போய்ட்டாங்க. வாங்க. சபரிக்குப் போவோம். இன்னிக்கு நளராஜன் ஸ்பெஷல் என்னன்னு பாப்போம்.''

சுகீதா அந்த விஷயத்தை அவ்வளவு சாதாரணமாக எடுத்துக் கொள்வாள் என்று எதிர்பார்க்காத கஸ்தூரிரங்கன் அவள் சீக்கிரத்தில் சமாதானமடைந்தது கண்டு சந்தோஷப்பட்டான்.

சிந்தனை செய்வது நமக்கு ஒரு கடினமான காரியமாகப்படுகிறது. உணர்ச்சிகளுக்கு ஆளாவது மிக எளிய காரியமாக இருக்கிறது. உள்ளத்தில் உணர்ச்சிகள் பொங்கும் போது, அவற்றில் மூழ்கி விடாமல் ஒதுங்கி நின்று யோசித்தால், யோசிப்பவர், உணர்ச்சிவசப்படுபவரை வெகு எளிதாகத் தம் வசப்படுத்த முடியும். சிந்தனையாளர் எதிராளியின் உணர்ச்சிகளுக்கேற்பப் பேசினாலே போதும்.

கஸ்தூரிரங்கனும் அப்படித்தான் சுகீதாவை வசப்படுத்தி விட்டான். சுகீதா, கஸ்தூரிரங்கன் தன்னைத் தூக்கிய போது, எங்கெங்கு தொட்டுத் தூக்கினான், அவளுக்காக எவ்வளவு உயர்வான நர்ஸிங்ஹோமில் அவளைச் சேர்த்திருக்கிறான் என்றெல்லாம் எண்ணி உணர்ச்சிவசப்பட்டு, துப்பாக்கியில் இருந்து குண்டு பாய்ந்ததைக் கூட வெகு எளிதான விஷயமாக எடுத்துக் கொண்டு விட்டாள்.

சாப்பிட்டாள். நளராஜனை அன்றைய ஸ்பெஷல் கொண்டு வரச் சொல்லி, அவன் கொண்டு வந்த 'கொழுக்கட்டை கொஹு'வை ஒரு பிடி பிடித்தாள். சாப்பிட்டானதும் அவனுடன் சபரியின் புனித அந்தரங்க அறையான சமையல் கட்டிற்குச் சென்று காப்பிப் பாட்டியை வருடி வருடி விசாரித்தாள். தமயந்திக்கு அன்னம் போல, சீதைக்கு மாருதி போல, காளிதாசனுக்கு மேகம் போல, சுகீதாவிற்கு காப்பிப் பாட்டி தெரிந்தாள்.

சுகீதாவின் உற்சாகம் விசாலிப் பாட்டியிடம் இல்லை. மகாராஷ்டிரக் கிழவி போன்ற பாவத்துடன் அவளருகில் இருந்த இன்னொரு கிழவியை அப்போதுதான் பார்த்தாள் சுகீதா.

''இது யார் பாட்டீ? சபரியில புது அப்பாயின்ட்மென்ட்டா?''

''இல்லடியம்மா. ஜானு ரங்கோலி கோலம் போடறவ. கல்யாணம் கார்த்தின்னு எங்கயாவது கூப்ட்டா போவா. இருக்கறது அமிஞ்சிக்கரை பக்கத்தில ஒரு கெழவிங்க இல்லத்தில. நேத்து வரைக்கும் அவ ஃப்ரெண்டா இருந்த நாராயணிக் கெழவி போய்ட்டாளாம். எடுத்துப் போடக் காசு பத்தலைன்னு ரங்காவைப் பாக்க வந்திருக்கா.''

அப்போதுதான் விசாலிப்பாட்டியின் கவலை முகத்திற்கான காரணம் புரிந்தது சுகீதாவிற்கு. தான் சந்தோஷமாயிருப்பதால் உலகமே சந்தோஷமாயிருக்கும் என்று எண்ணுவது எவ்வளவு மடத்தனம்?

''ஸாரி பாட்டி.''

''எதுக்குடி ஸாரியும், தாவணியும்?''

''நான் பாட்டுக்கு உங்க கஷ்டம் புரியாம என்னன்னவோ பேசிட்டேன் இல்ல.''

''நீ சிறுசு. இப்ப சிரிக்காம, இப்ப பேசாம எப்ப இப்படி இருக்கப் போறியாம்.... ரங்கா. ஜானுவுக்கு எவ்வளவு கொடுக்கலாம்?''

''ஐநூறு குடுங்களேன்.''

''மகராஜனா இருப்பேப்பா. ஒவ்வொரு தடவையும் யாராவது ஒருத்தி போய்ட்டா, ஒங்கிட்ட வந்து நிக்கறது எவக்குக் கஷ்டமாயிருக்குப்பா. சாவுச் செலவுக்குன்னு மாசா மாசம் பாங்க்லேர்ந்து ஏதாவது வர்ற மாதிரி ஒரு ஏற்பாடு பண்ணினா ரொம்ப வசதியா இருக்கும். அதான் ரெண்டு மாசத்துக்கு ஒரு தடவை, மூணு மாசத்துக்கு ஒரு தடவைன்னு ஏதாவது ஒண்ணு போயிடுதே.''

வந்திருந்த கிழவி இயல்பாகத்தான் பேசினாள். சுகீதாவின் இதயத்தை அந்த வார்த்தைகள் இரும்புக் கையால் பிசைவது போல் பிசைந்தன. அவளையுமறியாமல் ஓட்டுச் சார்பில் இருந்து இறங்கும் மழை நீர் போல கண்ணீர் இறங்கியது.

''ரங்கா. இப்படி அனாதையா செத்துப் போற கெழவிகளோட ஆத்மா உங்களை வாழ்த்தணும்னா இவங்களுக்கு அந்தப் பாட்டி கேக்கற மாதிரி ஏதாவது பர்மனண்டா ஒரு ஏற்பாடு செய்யணும் ரங்கா.''

''கொறைஞ்சது ஐம்பதாயிரமாவது வேணும் சுகீதா. நானே ஆஃபீஸ், ஆஃபீஸா ஏறி எறங்கி, இவங்களப் பத்தி சொல்லி வசூல் பண்ணலாம்னு இருக்கேன்.''

''எப்ப போலாம்?''

''என்னது?''

''நானும் வரேன் ரங்கா, உங்க கூட. ராமரோட அணில் மாதிரி, நானும் ஹெல்ப் பண்ணிட்டேன்னு பெருமையா நெனச்சிக்கலாம் இல்லியா?''

நிமிடத்திற்கு நிமிடம் இப்படி கலைடாஸ்கோப் பிம்பம் போல் உணர்ச்சி

களை மாற்றிக் கொண்டே போகும் கவிதாவைப் பார்க்க, கஸ்தூரிரங்கனுக்கு வேடிக்கையான வியப்பாய் இருந்தது.

மறுநாள். கறுகறுப்பான காலை பத்தரை. அலுவலகங்கள் தீப்பற்றிக் கொண்ட தினுசில் காரியங்களாற்றிக் கொண்டிருந்தன.

பாரிமுனையில் அமைந்திருந்த ஒரு வங்கிக் கிளையில் கஸ்தூரிரங்கன், கவிதாவோடு நுழைந்தான். யாசிப்பதற்காக அவன் வந்திருக்கிறான் என்பது தெரிந்தவுடன் பாங்க் மானேஜருக்கு, அவனை வரவேற்பதில் இருந்த ஆர்வம் குறைந்து போயிற்று.

''உள்ள போய்க் கேட்டுப் பாருங்களேன்'' என்று சொல்லி விட்டு மணியடிக்கத் தொடங்கிய தொலைபேசியை நோக்கிக் கையை நீட்டினார்.

கஸ்தூரிரங்கன் வங்கியில் வேலை செய்து கொண்டிருந்தவர்களில் சாந்த முகம் படைத்தவராகத் தேடி, அனுமானித்து ஒருவரை அணுகினான்.

''இது ஒரு நோபிள் பர்ப்பஸ் சார். வயசானவங்க எந்த ஆதரவும் இல்லாம இருக்காங்க......''

கவிதா அடுத்த டேபிளுக்குப் போனாள். படபடவென்று பொரிந்து கொட்டினாள். செத்துப் போகிற முதியோர்களின் ஆத்ம சாந்தி, அந்த மேஜையருகே நாற்காலி போட்டு அமர்ந்திருந்தவனுக்கு அமோகமாய் கிட்டும் என்று சிரித்துக் கொண்டே சொன்னாள்.

''பணம் சம்பாதிக்கறதுக்கு என்னவெல்லாம் பண்றானுங்க பாருங்க. கை, காலெல்லாம் நல்லா இருக்கு. நீட்டா டிரஸ் பண்ணியிருக்கான். ஆனா யாசகம் கேட்கிறான். அதுவும் எப்படி? செத்துப் போனா அடக்கம் பண்றதுக்காம். புதுசு புதுசா ஐடியா பண்றாங்க சார். தனியா போய்க் கேட்டா காசு கெடைக்குமோ கெடைக்காதோன்னு ஒரு கேஸை வேற கூட்டிக்கிட்டு வந்துர்றானுங்க. தாலி கட்னவன்னா நெனைக்கறீங்க. அதெல்லாம் கெடையாது. அது தள்ளிக்கிட்டு வந்த ஆளு. கலெக்ஷனுக்கு இவ்வளவு கமிஷன்னு பேசியிருப்பான். அவ புடைவையும், ரவிக்கையும் பாத்தீங்களா? சினிமாக்காரி தோத்துடுவாப்பா இவ கிட்ட.''

மூன்றாவது மேஜையில் இருந்த ஒருவன் கவிதா மாதிரி ஓர் இணை கிடைக்காத பொறாமையில் அவர்கள் காதுபட எதிரில் இருப்பவர்களிடம் முணுமுணுத்தான்.

கவிதா சட்டென்று திரும்பி, அவனை நோக்கி நடந்து சென்று 'பளீச்' என்று அவன் கன்னத்தில் அறைந்தாள்.

(தொடரும்)



# பாலம்

●● பதினெட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த விலை மதிப்பு மிக்க வெள்ளி, தாமிர நாணயங்கள் என்னிடம் உள்ளன. வாங்கிக் கொள்ள விரும்புவோர் தொடர்பு கொள்ளவும்.

- டி. லோகநாதன்,
Deputy Director (Proj)
Spices Board,
St. Vincent Cross Rd,
Ernakulam - 682 018.

●● வி வ சா ய ப் பண்ணை ஒன்று வியாபார நோக்கில் அமைக்கத் திட்டம். பி.எஸ்ஸி (விவசாயம்) படித்தவர்கள் அல்லது இத் துறையில் அனுபவம் உள்ளவர்கள் ஒத்துழைக்கவோ பங்கு பெறவோ விருப்பமிருந்தால் எழுதவும்.

- எஸ். செல்வராஜ்,
45, அஞ்சுகம் நகர் 2வது தெரு,
ஜாபர்கான்பேட்டை,
சென்னை - 600 095.

●● என் நண்பன் பள்ளியில் படித்த வி. சோமநாதனுடன் தொடர்பு கொண்டு பத்து ஆண்டுகள் ஆகி விட்டன. வங்கியில் வேலை பார்க்கிறார். இவர் தந்தை பட்டிமன்றப் பேச்சாளர்; தவறாமல் கல்கி படிப்பவர். கடிதம் எதிர்பார்க்கிறேன்.

- இ. சிதம்பரம்,
51 C, ஆசாரி தந்த வனத் தெரு,
திருத்தங்கல் - 626 130
சிவகாசி (வழி).

●● தமிழ், ஆங்கிலம், தெலுங்கு, ஹிந்தி முதலிய பாஷைகள் மூலம் தபால் மூலமாக சமஸ்கிருதம் எழுதப் படிக்கக் கற்றுக் கொள்ள எங்களை அணுகலாம். ஸ்டேஷனரி மற்றும் தபால் கட்டணம் மட்டும் வசூலிக்கப்படும்.

- விகவ சம்ஸ்கிருத பிரதிஷ்டானம்,
"சாந்தி நிலையம்"
211 B, திரு.வி.க. சாலை,
சேலம் - 636 003.

●● தமிழ்வாணன் அவர்களோடு நீண்ட காலம் நெருங்கிப் பழகியவன் என்ற வகையில் அவரது நினைவைப் போற்ற புத்தகம் ஒன்று தயாரித்து வெளியிடும் பணியில் ஈடுபட்டுள்ளேன். சுவையான தகவல்கள், சம்பவங்கள், புகைப்படங்கள் வைத்திருப்போர் தொடர்பு கொள்க.

- ஜி. கதிரேசன்,
பார்வதி நிலையம்,
லெனின் வீதி,
சிறுமுகை - 641 302.

●● தஞ்சை மேலவீதி ஸ்ரீ சங்கரமடம் நடத்தும் ப்ரயோக பாடசாலைக்கு ஓய்வு பெற்ற, பெறப் போகிறவர்கள் பணியாற்ற முன்வரலாம். ப்ரோயகம் கற்றுக் கொள்ள ஆர்வமுள்ள இளைஞர்களையும் வரவேற்கிறோம்.

- வி.எஸ். வாஞ்சிநாதன்,
34, நடராஜபுரம் தெற்கு காலனி,
14வது தெரு விரிவாக்கம்,
தஞ்சை - 613 007.

●● வளரும் எங்கள் நூலகம் இன்னும் போதிய நிதி வசதி பெறாததால் புத்தக நன்கொடைகளை வரவேற்கிறோம். குறிப்பாக, பார்த்திபன் கனவு, வாஷிங்டனில் திருமணம், துப்பறியும் சாம்பு. நூலில் நன்கொடையாளரின் பெயர் பதிவு செய்யப்படும்.

- அன்பு நூலகம்.
30, மல்லிகா நகர்,
பம்மல், சென்னை - 600 075.

●● DME மூன்றாம் ஆண்டு படிக்கிறேன். எனக்கு பிராஜெக்ட் பற்றிய ஐடியாக்கள் இதர விவரங்கள் தெரிவித்து உதவுமாறு வேண்டுகிறேன்.

- ஆர். பரணி,
272, EPB நகர்,
ஈரோடு - 638 004.

●● கல்கி தீபாவளி மலர் (1987) யாரிடமாவது இருந்தால், தந்து உதவினால், தக்க விலை கொடுத்துப் பெற்றுக் கொள்ளத் தயார். விவரம் எழுதுக.

- ஆர். சீதாராமன்.
545, (மாடி) "ஸ்ரீவத்ஸா"
16 Crosss, 6வது Phase
J.P. Nagar,
பெங்களூர் - 560 078.

●● ICWAI - Cost Accounts இண்டர்மீடியட் தேர்வின் இரண்டு குரூப்களுக்கும் தேவையான அனைத்துப் புத்தகங்களும் நோட்ஸ்களும் இரண்டு செட் கைவசம் உள்ளன. தேவைப்படுவோருக்குக் கொடுத்து உதவ எண்ணம். நேரில் தொடர்பு கொள்ளவும்.

- எஸ். பானுமதி,
15, தெற்குமாட வீதி,
திருவொற்றியூர் (அஞ்சல்),
சென்னை - 600 019.

பாலம் மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி காரியாலயம் பொறுப்பு ஏற்க இயலாது.



* பாலகிருஷ்ணபிள்ளை

# வளைக் கரங்கள் செய்த வேலை நிறுத்தம்!

கேரள அரசு போக்குவரத்துக் கழகத்தில் ஏகப்பட்ட நஷ்டம். காரணம் தமிழகத்தில் ஒரு பஸ்ஸுக்கு ஆறு தொழிலாளர்கள் என்றால், கேரள போக்குவரத்தில் பன்னிரண்டு தொழிலாளர்கள்! நஷ்டத்தை இனியும் தாக்குப்பிடிக்க முடியாத நிலையில் தொழிலாளர்களை எப்படிக் குறைப்பது என்று போக்குவரத்துத் துறை அமைச்சர் பாலகிருஷ்ணபிள்ளை யோசித்துக் கொண்டிருந்தார். அப்போது பார்த்து போக்குவரத்துக் கழக ஊழியர்கள் பல்வேறு கோரிக்கைகளை முன்வைத்து வேலை நிறுத்தம் செய்ய, இதுதான் சமயம் என்று ஒரே நாளில் ஏராளமான தனியார் பஸ்களுக்கு பர்மிட் வழங்கி விட்டார் அமைச்சர். கிடைத்த டிரைவர்களைக் கொண்டு அரசு பஸ்களையும் ஓட்ட வைத்தார். பொது மக்கள் அமைச்சரின் ஏற்பாட்டை ஆதரிக்கவே, அரசு போக்குவரத்துக் கழகத்தை லிமிடெட் கம்பெனியாக்குவதற்கான ஏற்பாடுகளையும் செய்து விட்டார் அமைச்சர். அப்படிச் செய்யக் கூடாது என்று போக்குவரத்துக் கழக ஊழியர்கள் 'ஸ்டே' வாங்கி விட்டார்கள் என்றாலும் அமைச்சர் தமது முடிவில் உறுதியாகவே இருக்கிறார்!

கொசுறு : வேலை நிறுத்தத்தின் போது, போக்குவரத்துக் கழக ஊழியர்களைப் பற்றிப் பலவாறு வர்ணித்த அமைச்சர், பெண் ஊழியர்களைப் பற்றிக் குறிப்பிடும் போது, ''அவர்கள் தங்கள் கோரிக்கைகளை வலியுறுத்தக் கோஷம் போட்டுக் கைகளை உயர்த்தக் கூட முடியாதவர்களாக இருக்கிறார்கள். அந்த அளவுக்குத் தங்கள் கைகளில் தங்க வளையல்கள் அணிந்திருக்கிறார்கள்!'' என்று குறிப்பிடப் போக, இப்போது அதற்கும் சேர்த்துப் போராட ஆரம்பித்து விட்டார்கள் ஊழியர்கள்!

சென்ற ஆண்டு மார்ச் மாதம் தேர்வெழுதிய கல்லூரி மாணவ - மாணவியரில் 38 பேர் தங்களுடைய 'கமர்ஷியல் லா' விடைத் தாளை மறு மதிப்பீடு செய்து மார்க் போட வேண்டும் என்று பல்கலைக் கழகத்தில் புகார் செய்ய, அவர்கள் எழுதிய விடைத் தாள்களையே காணவில்லை! விசாரணை செய்த போது, பேப்பர் திருத்திய அந்த ஆசிரியர், மதிப்பெண்களை மட்டும் பல்கலைக் கழகத்துக்கு அனுப்பி விட்டு, விடைத் தாள்களை எடைக்குப் போட்டுக் காசு பண்ணி விட்டார் என்று தெரிய வந்தது. தேர்வுக் கட்டணமில்லாமல் அந்த மாணவர்கள் மீண்டும் தேர்வெழுத விசாரணை செய்த கமிட்டி உத்தரவிட்டதோடு, இனி அந்த ஆசிரியர் விடைத் தாள்களைத் திருத்த அனுமதிக்கப்படக் கூடாதென்றும் கட்டளை பிறப்பித்துள்ளது.

திருவனந்தபுரத்திலிருந்து :
எஸ். எஸ். மணி

# கோயில்கள் கட்டியவர்; குரான்-பைபிளும் கற்றவர்!

அந்தப் பையனுக்கு அப்போது பன்னிரண்டு வயதுதான் இருக்கும்.

கதா காலட்சேபத் தொழில் செய்து வந்த தகப்பனார் மல்லய்ய தாச பாகவதருக்கு அன்று உடல்நலக் குறைவு ஏற்பட்டிருந்தது.

''மகனே, என்னால் இன்று கதை சொல்லப் போக முடியாது. நீதான் எனக்குப் பதிலாக இன்றைக்குப் போக வேணும்!'' என்று கேட்டுக் கொண்டார்.

அன்றைக்குத் திருப்புகழ் உரையை மிகப் பெரிய பிரசங்கமாக நடத்தி, முதல் சொற்பொழிவிலேயே அத்தனை பேருடைய பாராட்டையும் பெற்ற பையன் - திருமுருக கிருபானந்தவாரியார்.

வடஆர்க்காடு மாவட்டம் காங்கேய நல்லூரில் பிறந்தவர் வாரியார். பிறந்த தேதி ஆகஸ்ட் 25, 1906. மல்லய்ய தாச பாகவதருக்கும் கனகவல்லி அம்மையாருக்கும் நான்காவது மகனாகப் பிறந்தவர். பத்தொன்பது வயதிலேயே கல்யாணம். மனைவி - உறவுப் பெண்ணான அமிர்தலட்சுமி.

முறையாகப் பள்ளிக்கூடம் சென்று கற்காதவர் வாரியார். தந்தைதான் குரு. அவரிடம் தமிழும், சமஸ்கிருதமும் படித்தார். பன்னிரண்டாவது வயதிலே, ஆயிரம் பாடல்களைத் தலைகீழாகச் சொல்லும் ஆற்றல் அவரிடம் இருந்தது. சென்னை யானைக்கவுனி பகுதியில் உள்ள பிரம்மஸ்ரீ தென்மடம் வரதாச்சாரியாரிடம் வீணை கற்றுக் கொண்டார். எட்டு வயதில் வெண்பா பாடியவர் வாரியார்!

வாரியார் எங்கு சென்றாலும், தம்முடன் கூடவே ஒரு பெட்டியை எடுத்துச் செல்லுவார். அதில் பஞ்சலோகத்தில் செய்த வயலூர் முருகன் வடிவத்தை வைத்திருப்பார். தமது 36 ஆவது வயதில் தொடங்கி, கடைசி வரை, அதைப் போகும் இடம் எல்லாம் கொண்டு சென்றார். தினமும் அதற்குப் பூசை செய்து முடித்த பிறகே உணவு அருந்துவார். அதுவரை தண்ணீர் கூட அருந்த மாட்டார்!

மேல் விஷாரம் சென்று, ஒரு மௌல்வியிடம் குரானைத் தமிழில் எழுதிக் கொடுக்கச் சொல்லி மனப்பாடம் செய்தார். அப்போது வாரியார் வயது பன்னிரண்டுதான்! அப்பாவுக்குக்கூடத் தெரியாமல் இதைச் செய்தாராம்.

பைபிளும் முழுக்கத் தெரிந்தவர். போப் ஆண்டவரிடம் அதற்காகப் பாராட்டுப் பெற்றவர்.

வாரியார் உதவி செய்து, திருப்பணிகள் புரிந்த திருத்தலங்கள் ஏராளம். திருப்புகழுக்கு உரை எழுதியதோடு, 'திருப்புகழமிர்தம்' என்ற மாதப் பத்திரிகையை 37 வருடங்கள் தொடர்ந்து நடத்தினார் வாரியார். அருணகிரி நாதர் பெயரில் அறக்கட்டளை அமைத்து, இன்றைக்கும் தினசரி 12 பேருக்கு உணவு வழங்க ஏற்பாடு செய்திருக்கிறார்.

87 வயது வாரியாருக்கு எந்தவித நோயும் இருக்கவில்லை. உலகில் தமிழர்கள் எங்கெல்லாம் இருக்கிறார்களோ, அங்கெல்லாம் போய் பக்திச் சொற்பொழிவுகள் செய்திருக்கிறார்.

சங்கீத நாடக அகாதமி விருது, கலைமாமணி, தனிப்பெரும் கலைஞர் விருதுகள், காஞ்சிப் பெரியவர் வழங்கிய சரஸ்வதி கடாட்ச விருது என்று நிறையவே வாரியாருக்குப் பட்டங்கள் உண்டு.

வாரியார் மேல்-சட்டை அணிய மாட்டார். ஆடையில் எளிமையானவர். சிரிக்கச் சிரிக்கக் கதை சொல்லி, தாமும் உடல் குலுங்கச் சிரிப்பார். எதிரே உட்கார்ந்திருக்கும் சிறுவர்களிடம் கேள்விகள் கேட்பார். பதில் சொன்னால் பாராட்டுவார்.

ஆன்மீகவாதிகள் பாராட்டுவதில் ஆச்சரியமில்லை. ''அவருடைய தமிழில் நானே மயங்கியதுண்டு'' என்று கலைஞர் பாராட்டியிருக்கிறார். கி. வீரமணியும் கூட!

எம்.ஜி.ஆருக்குப் 'பொன்மனச் செம்மல்' பட்டம் வழங்கியவர் கிருபானந்த வாரியார்தான். எல்லோருக்கும் நிலத்தில்தான் உயிர் பிரியும். வாரியாருக்கு வானத்தில் உயிர் பிரிந்தது!

தினசரிகளிலிருந்து தொகுப்பு :
எஸ்.வி.என்.



# கிளிப் பேச்சு கேட்க வா!

**த**மிழில் இப்படியொரு நிஜ நகைச்சுவைப் படம் இதற்கு முன் வந்திருக்கிறதா, தெரியவில்லை. உளுத்துப் போன 'கெக்கே பிக்கே'களுக்குப் பழகியவர்களுக்கு இந்த ரகம், வடகிழக்குப் பருவ மழை.

கிராமத்துக்குப் புதுசாக வரும் ஸ்கூல் வாத்தியார் ஒரு பாழடைந்த பங்களாவின் வாட்ச்மேனாகவும் வேலை பார்க்க வேண்டியிருக்கிறது. அதுவோ பேய் பங்களா. ஓர் இரவு அங்கு தங்கி வந்ததை, மெட்ராஸ்காரன் மழை பார்த்தது போல் பார்க்கும் மக்கள்.

'ஏன்டா லேட்டு?' என்று அந்த வாத்தியார் கேட்டால், 'நைட்டு நீங்க ஆவி அடிச்சி செத்திருப்பீங்க; வர மாட்டீங்கன்னு நினைச்சேன் சார்' என்று வெகுளும் கிராமத்து அரை நிஜார், 'ஆவி' வேஷம் போட்டு மம்முட்டியை முழிபிதுங்க வைக்கும் கனகா...

ஹேரால்டான். கனகாவுக்கு இது, பிறிதொரு 'கரகாட்டக்காரன்'. என்ன ஒரு துள்ளல்! வாத்தியார் மம்முட்டியை, தன் காலடி மண்ணெடுத்து நெற்றியில் வைத்துக் கொள்ளச் செய்வதாக வாண்டுகளிடம் சவால் விட்டு, நிரூபிக்கிறாரே - அங்கே ஒரு ஹைகூ இருக்கிறது. தொடர்வதான கடைசிக் கட்ட உருக்கல்களில் ஒரு புதுக் கவிதை. கிளைமாக்ஸில் (மாறாத) மரபுக் கவிதை.

கைபிடுக்கில் குடையுடன் அரை சதம் அசட்டுக் களையுடன் வருகிற மம்முட்டிக்கும் தமிழில் மறு ஜனனம். அந்த கடாரங்காய்க் குரலும், காராசேவுத் தமிழும் என்னமாய் ஒட்டிக் கொள்கின்றன? ஆயினும் இவருக்குமா டான்ஸ் ஆடுகிற ஆசை? கடவுளே!

கதையின் ஆதாரஸ்தானத்தில் ஒரு குழப்ஸ். விஜயகுமார் 20 வருடங்களாக ஏதோ பூஜை செய்கிறாராம். பூஜை முடிந்தால் வேறொருவர் பெயரிலிருக்கும் வீடு இவருக்குக் கைமாறி விடுமா? அதற்காக 19 பலி கொடுத்திருக்கிறாராம். கிளைமாக்ஸில் கூடவா போலீஸ் தலைகாட்டக் கூடாது? இந்த மாதிரி கேள்விகளைக் கேட்கத் தோன்றாமலே கூடப் போயிருக்கலாம் - ஆரம்ப வேகம் கடைசி வரை இருந்திருந்தால்.

அப்புறம் ஒரு விஷயம். வாலியின் பாடல்கள். என்ன சொல்ல? சினிமா பாட்டு என்பதற்காகக் கவித்துவத்தைக் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளி விட வேண்டுமா என்ன?

இசை இளையராஜா இருக்கிறது. ஒரே பாட்டில் ராஜா நிழல் தெரிகிறது.

பேய், பிசாசு கதை என்பதால் முழுக்க முழுக்கப் 'பேத்தலா'கவெல்லாம் இல்லை. ஒரு மேஜிக் ஷோ பார்க்கிற உற்சாகம் படம் முழுக்க இருக்கிறது. தயவுசெய்து லாஜிக் பற்றி மட்டும் கேட்காதீர்கள்!

- ஆர்.பி.ஆர்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka



